தாயுமானவர் இயற்றிய

# பரசிவ வணக்கம்



அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

प्रज्ञानं ब्रह्म

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின்

விரிவுரையுடன்



ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி மாவட்டம்
1995

தபோவனத் தொடர் 27

முதல் ஐந்து பதிப்புகள் வரை 15,000
ஆறாம் பதிப்பு 1995 5,000

திருப்பராய்த்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம்,
காரியதரிசியால் பிரசுரிக்கப்பட்டது.



விலை ரூ. 6-00

தபோவன அச்சுப்பள்ளி, திருப்பராய்த்துறை.

தாயுமானவர் [illegible]

# பரசிவ வணக்கம்

## விரிவுரையுடன்

தாயுமானசுவாமி பாடல்களுக்கு தலைப்புகள் பல இருக்கின்றன. அவைகளுள் முதல் தலைப்பு ஆராய்ச்சிக் குரியது. திருவருள் விலாசப் பரசிவ வணக்கம் என அது பெயர் பெறுகிறது. இத்தலைப்பின் கீழ் மூன்று பாடல்கள் அமைந்துள்ளன. இவைகளுள் அடங்கியுள்ள கோட்பாடு ஒன்றைச் சாதகர்கள் கவனிக்க வேண்டும். மேற்போக்காகப் பார்க்குமிடத்து மூன்று பாடல்களும் பரம்பொருள் வணக்கத்துக்குரியனவாகின்றன. சற்று ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் மற்றுமோர் உண்மை வெளியாகிறது. மஹாவாக்கியத்துக்கு விளக்கமாக இம் மூன்றும் வந்தமைகின்றன எனலாம். 'தத் துவம் அஸி' என்பது மஹா வாக்கியம். இதற்கு விளக்கமாகவே நூல்கள் அனைத்தும் அமைந்துள்ளன. தத் என்னும் பதம் பரமாத்மனைக் குறிக்கிறது. துவம் என்னும் பதம் ஜீவாத்மனைக் குறிக்கிறது. அஸி என்னும் பதம் பரமாத்மனுக்கும் ஜீவாத்மனுக்கும் உள்ள இணக்கத்தைக் காட்டுகிறது. திருவருள் விலாசப் பரசிவ வணக்கம் என்னும் தலைப்பின் கீழ் உள்ள மூன்று பாட்டுக்களும் இதே கோட்பாட்டை நிறைவேற்றுகின்றன. முதலாவது பாடல் பரம்பொருளைக் குறிக்கிறது. இரண்டாவது பாடல் ஜீவதத்துவத்தை எடுத்துக் காட்டுகிறது. என்னென்ன பாங்கில் இவ்விரண்டுக்குமிடையிலே உள்ள இணக்

கத்தை நிலைநாட்டலாம் என்பதைக் கடைசிப்பாட்டு தெளிவுபடுத்துகிறது.

பரம்பொருளின் தத்துவங்களெல்லாம் முதல் பாட்டில் தொடர்ந்து பகரப்படுகின்றன. கடவுள் எங்கே இருக்கின்றார் என்னும் கேள்வி எழலாம். அவர் சொர்க்கத்தில் இருக்கின்றார் என்றும், பரமபதத்தில் வீற்றிருக்கின்றார் என்றும், கயிலாயத்திலோ அல்லது வைகுண்டத்திலோ எழுந்தருளியிருக்கிறார் என்றும் விதவிதமாக சமயங்கள் சாற்றுகின்றன. இப்பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவர் என்றும் தீர்க்கதரிசிகளுள் ஒரு சிலர் பகர்வர். ஆனால் பரம்பொருளைப்பற்றிய உண்மைதான் என்ன? அது அங்கு இருக்கிறது, இங்கு இருக்கிறது என்று இயம்புதற்கு இடம் தருவதில்லை. எங்கும் நிறைந்திருப்பது அதுவே. எங்கும் என்கின்ற சொல்லே அதற்குப் பொருந்தாது. ஏனென்றால் இடத்தில் அடங்குவதன்று அது. ஒரு வள்ளத்தினுள் நீர் இருந்தால் நீரைக் கொள்ளுகிற வள்ளம் பெரியது, கொள்ளப் பெறுகிற நீர் சிறியது எனப் பொருள்படும். எங்கும் இறைவன் இருக்கிறான் என்றால் இறைவனுக்கு ஆதாரமான வெளி பெரிதாய் விடுகிறது. அதனுள் அடங்கப் பெறுகிற வஸ்து சிறியதாய் விடுகிறது. உண்மையில் வெளி என்பதும், திக்கு அல்லது திசை என்பதும் எல்லாம் இப்பொருளில் அடங்கி விடுகின்றன. பரம்பொருளுக்குப் புறம்பாக வெளி என்பதும் இல்லை. பரம்பொருளையே பெருவெளியாக வைத்துக் கொள்ளலாம். நாம் கிரகிக்கும் வெட்ட வெளியும் அதுவும் ஒன்றா என்னும் ஐயம் அடுத்தபடியாக வருகிறது. வெட்ட வெளியை ஜட ஆகாசம் என்பார்கள். அது உணர்வற்றது என்பது அதன் பொருள். ஆனால் இறைவனோ சித்

ஆகாசம் அல்லது சித் அமபரம். அவன் அறிவு வெளியாய் இருக்கின்றான். அறிவு பிரகாசமானது. அதன் பிரகாசத் துக்குத் தோற்றமும் மறைவும் இல்லை. அணையா விளக் காக அது யாண்டும் உளது. அக்காரணத்தை முன்னிட்டே அது பிரகாசமானது என்று சொல்லப்படுகிறது.

பிரகாசமான அறிவுவெளி ஒன்றே ஏனைய பொருள் களையெல்லாம் உள்ளது உள்ளபடி விளக்கவல்லது. இதற்கொரு சான்று எடுத்துக் கொள்வோம். சினிமாப் படத்திரை தூவெண்மையாய் இருக்கவேண்டும். கருப்புத் திரையில் படத்தைக் காட்ட முடியாது. தூவெண்மை பிரகாசத்தின் புறத்தோற்றம். வெள்ளைத்திரையின் மீது எல்லா நிறங்களையும் உள்ளபடி காண்பிக்கலாம். நிற மற்ற இருளையும் உள்ளபடி காட்டுதற்கு வெண்மை நிறம் பயன்படுகிறது. சித் அம்பரம் அல்லது அறிவுவெளி இந்த வெள்ளைத் திரைக்கு ஒப்பானது. பிரபஞ்சம் என்னும் படத்தை அறிவுத்திரை உள்ளபடி விளக்கு கிறது. பிரபஞ்சத்துக்கு இத்திரை அப்பாற்பட்டதாகவும் இருக்கிறது. பிரபஞ்சத்தை விளக்குவதால் இந்த ஆத்மப் பிரகாசத்துக்குக் குறை ஒன்றும் வந்து விடுவதில்லை. தீப் பற்றி எரிவதை சினிமாத்திரை விளக்குகிறது. கொலை புரிவதையும் அதே திரை விளக்குகிறது. இறைவணக்கம் பண்ணுவதையும் அது காட்டித் தருகிறது. நலம் கேடு ஆகிய இருவிதக் காட்சிகளைக் காட்டித் தருதற்கிடை யில் படத்திரை தன்மயமாய் இருக்கிறது. நலம் கேடு ஆகிய இரண்டிலும் அது கட்டுப்பட்டதல்ல. அங்ஙனம் அறிவுத்திரை அண்டங்கள் அனைத்தையும் தன்னகத்து அடக்கி வைத்துக் காட்டுகிறது. அண்டங்களிலுள்ள தன்மைகளுக்கெல்லாம் அது கட்டுப்படாமலும் இருக்

கிறது. எங்கும் பிரகாசமாய் இருப்பதன் பொருள் இதுவேயாம்.

அது அறிவு வெளியாய் இருப்பது மட்டுமன்று. தனது அறிவில் அது ஆனந்தமடைகிறது. அறிவு ஓங்க ஓங்க ஆனந்தமும் அதிகரிக்கிறது. பேரறிவுப் பொருளாகப் பொலியுமிடத்து பேரானந்தமும் அதன்பால் பொலிகிறது. அக்காரணத்தை முன்னிட்டே அது ஆனந்த பூர்த்தியாய் உள்ளது என்று சொல்லப்படுகிறது. ஆக, அது ஏக காலத்தில் பேரறிவு சொரூபமாகவும், பேரானந்த சொரூபமாகவும் இருக்கிறது. அறிவு வேறு ஆனந்தம் வேறு அல்ல. அறிவே ஆனந்தம்; ஆனந்தமே அறிவு. அதற்குமேல் மற்றொரு மகிமை அதனிடத்து இருக்கிறது. அருளொடு நிறைந்திருப்பதே அம்மகிமையாம். பரம் பொருளின் அருள் நிலைக்கு சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். பூமியில் பாலைவனம் என்னும் பகுதி ஒன்று உண்டு. செழிப்பான நிலம் என்னும் பகுதி வேறு உளது. பாலைவனத்தில் விதை விதைத்தால் செடியின் தோற்றம் பொலிவு உறாது. செழிப்பு நிலத்தில் விதைத்த விதையோ ஓங்கி வளர்ந்து தன் இயல்பையெல்லாம் நன்கு விளக்குகிறது. செழிப்பான நிலத்தை அருள் நிறைந்தது எனலாம். கடவுளின் பெருமையே அருள் எனப் பெயர் பெறுகிறது. அண்டங்கள் அனைத்தையும் உயிர்கள் எல்லாவற்றையும் தாங்கியுள்ள தெய்வம் ஒவ்வொரு பொருளின் தன்மை நன்கு விளங்குதற்கான மூலாதாரமாகின்றது. தெய்வ சக்தியைத் துணையாகக் கொண்டு சராசரங்கள் யாவும் தம் இயல்புகளை உள்ளபடி விளக்குகின்றன. அதற்குத் துணையாக தெய்வம் என்னும் மூலப் பொருள் இருப்பதால் அது அருளொடு நிறைந்தது என்று

சொல்லப்படுகிறது. படத்திரை படங்களையெல்லாம் தன்னகத்து அடக்கிக் காட்டுவது போன்று பரம்பொருள் என்னும் அருள்வெளி அகிலாண்ட கோடிகளையெல்லாம் அடக்கி வைத்து விளக்கிக் காட்டிக் கொண்டிருக்கிறது.

நீரில் அலை ஒன்றின்மீது சூரிய பிம்பம் படுகிறது. ஒவ்வொரு பிம்பமும் ஒவ்வொரு சூரியனாகக் காட்சி கொடுக்கிறது. மூலப்பொருளாகிய சூரியன் இருப்ப தால்தான் எண்ணிறந்த சூரியத் தோற்றங்களை அலை களின்மீது காண்கின்றோம். எண்ணிறந்த உயிர்களின் தோற்றமும் அத்தகையது. அழிவில்லாத மூல உயிர்ப் பொருள் இருப்பதால் அதன் புறத்தோற்றங்களாக ஜீவர்கள் தென்படுகின்றார்கள். ஆதலால் உயிர்க் குயிராய் த்ழைத்த பொருள் என்று அது பகரப்பெறு கிறது. இக்கோட்பாடு நமக்கு நன்கு விளங்குதற்கு மற்றுமோர் உபமானத்தையும் எடுத்துக் கொள்ளலாம். கணக்கற்ற மின்விளக்குகள் எரிகின்றன. இவைகள் எரிவதற்கு மின்சக்தி வேண்டும். இந்த மின்சக்தி மின் ஜனனியால் உண்டுபண்ணப்படுகிறது. மின்விளக்கு என்னும் உயிருக்கு உயிராய் இருப்பது மின்ஜனனி. அதே பாங்கில் உயிர்களாகிய நமக்கு உயிராய் இருப்பது மனத்தகத்து மறைந்திருக்கும் பரம்பொருள். மனத்தகத்து மறைந்துள்ள இப்பொருளை உள்ளபடி அறிந்துகொள் ளும் ஆற்றல் மனதுக்கு இல்லை. கண் என்னும் கருவியைக் கொண்டு ஜீவன் புறத்தே உள்ள பொருளைப் பார்க் கிறான். ஆனால் தன்னையே காண்பதற்கு கண் என்னும் கருவி உதவாது. அதேவிதத்தில் மனது என்னும் கருவி யைக் கொண்டு ஆத்மா பிரபஞ்சப் பொருள்களை யெல்லாம் காண்கின்றது. அப்படிக் காண்கின்ற பொருள்

களையெல்லாம் வாக்கால் வர்ணிக்கவும் முடியும். பின்பு இந்த மனதையும் வாக்கையும் ஏவுகின்ற ஆத்மனை விளக்குதற்கு இவ்விரண்டும் உதவமாட்டா. ஆதலால் மனவாக்கினில் தட்டாமல் நின்றதெது என அம்மூலப் பொருள் பகரப்பெறுகிறது. சிந்தைக்கும் சொல்லுக்கும் எட்டாத இப்பொருளை சிந்தையானது ஏகதேசம் சிந்திக்கிறது. சொல்லுக்கெட்டாததை அரைகுறையாகச் சொல்லானது விளக்க முயலுகிறது. அத்தகைய முயற்சியே கருத்து வேற்றுமையாக வடிவெடுக்கிறது. ஒவ்வொரு மனிதனும் அவனவன் சிந்தைக்கும் சொல் திறமைக்கும் ஏற்ப இந்த ஒரே மூலப்பொருளை வெவ்வேறு விதங்களில் விளக்குகிறான். இதனால் மதபேதம் ஏற்படுகிறது. தெய்வத்துக்கு மனிதன் தரும் விளக்கமே வேறுபட்டு நிற்கின்றது. எத்தனை கோடி மனிதர்கள் இருக்கின்றார்களோ அத்தனைகோடி கருத்து வேற்றுமையும் அனுவளவாவது அமைவது இயல்பு. எனவே சமயக்கோடிகளெல்லாம் ஒரே பொருளைக் குறித்து தம் தெய்வமென்றும் என் தெய்வமென்றும் எதிர் வழக்காடுகின்றனர். இத்தகைய வழக்குக்குத் துவக்கமும் இல்லை, முடிவும் இல்லை. ஜீவ கோடிகள் ஆதியந்தமில்லாது சர்வகாலமும் இருந்து வருவார்கள். ஆதலால் மதபேதமும் சர்வகாலமும் இருந்து வரும். இத்தனை புாங்குகளில் உயிர்கள் பேசுதற்கும் வினையாற்றுதற்கும் வலிவு கொடுப்பதும் அதே மூலப் பொருளாகிய பரமாத்மனாம்.

பெருவலிவின் அறிகுறிகளைப் பிரபஞ்சமெங்கும் காணலாம். கணக்கற்ற சூரியர்கள், ஒவ்வொரு சூரியனுக்கும் உரிய மண்டலங்கள் ஆகியவைகளில் வெளிக்கிளம்பும் ஆற்றல் அளப்பரியதாகும். ஒரு சூரிய மண்ட

லத்தில் நம் பூமிபோன்ற ஒரு கோளம் ஒரு புள்ளிக்குச் சமானமானது. இந்த பூமியில் கிளம்பும் மேகம் எவ்வளவு அல்பமானது என்பது சொல்லாமலே விளங்கும். ஆயினும் ஒரு சிறு மேகமண்டலத்தில் தோன்றும் மின்சக்தி பல வருஷங்களுக்குப் பல நகரங்களுக்கு வேண்டிய விசையைக் கொடுக்க அவ்வளவு பெரியதாகின்றது. இதற்கெல்லாம் மேலாக ஒரு அணுவில் அடங்கிக்கிடக்கும் விசை உலகுக்கு எத்தகைய பெரிய நலத்தை அல்லது கேட்டைச் செய்ய வல்லது என்பதை இக்காலத்திய பௌதிக அறிஞர்கள் உணர்ந்து வருகின்றனர். இதையெல்லாம் யோசிக்குங்கால் இயற்கையின் வலிவு அளப்பரியதென்பது வெளியாகிறது. இந்த இயற்கைக்கே மூலப்பொருளாய் இருக்கும் பரம் பொருளைச் சர்வ சக்திமான் என்று சொல்லாது வேறு எங்ஙனம் விவரிக்க முடியும்? அத்தகைய பொருளை யாதினும் வல்ல ஒரு பொருள் என்கின்றார் தாயுமானவர். தெய்வத்திடத்துள்ள அத்தகைய சக்தி வெறும் ஜட சக்தியன்று. அது சித் சக்தி. அதாவது அறிவோடு கூடிய வல்லமை. அத்தகைய வல்லமையினின்றே இன்பம் உரு வெடுக்கிறது. குழந்தையொன்று திறமையுடன் மண் வீடு கட்டிவிட்டால் அது இன்பமடைகிறது. மாணாக்கன் ஒருவன் ஒரு பந்தயத்தில் ஓடி வென்றுவிட்டால் இன்பமடைகின்றான். கிருஷிகன் பூமியைத் திருத்தி யமைத்துவிட்டால் இன்பமடைகின்றான். சில்பி கல்லைச் செதுக்கி உருவாக்கிவிட்டால் இன்பமடைகின்றான். அறிவோடு கூடிய வல்லமை இங்ஙனம் ஆக்கத்துறையில் விளையாற்றும்பொழுது இன்பம் தானே பொங்கி வருகிறது. எங்கெல்லாம் இன்பத்தைக் காண்கின்றோமோ அங்கெல்லாம் உண்மையில் மிளிர்வது தெய்வ சாந்நித்யம்.

சிற்றுயிர்களிடத்தும் இன்பமுண்டு. பேருயிர்களிடத்தும் இன்பமுண்டு. தெய்வம் எங்கும் நிறைபொருள் என்பதற்கு யாண்டும் மிளிர்கிற இன்பமே சான்றாகிறது. இன்பப் பொருளாகிய தெய்வம் என்றைக்கும் உள்ளது. பிரபஞ்சம் என்பது ஒரு காலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் இல்லாது ஒடுங்கிப் போய்விடுகிறது. ஒருகாலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் இல்லாதுபோவது ஒன்று நித்தியவஸ்துவாகாது. தெய்வமோ காலத்தால் அடிபடு வதில்லை. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பதெல்லாம் அதற்குக் கிடையாது. அது என்றைக்கும் உள்ளது நித்திய வஸ்து என்பது அதுவே. மாறுதலின்றி உள்ளபடி அது இருப்பதால் அது சாசுவதமானது. காலத்தில் அது கட்டுப்படாமையினால் அது கங்குல் பகலற்றது. கங்குல் என்பது இரவு எனப் பொருள்படுகிறது. கதிரவன் தென்படும் நேரத்தைப் பகல் என்றும், அவன் மறைந்திருக்கும் நேரத்தைக் கங்குல் என்றும் இயம்புகின்றோம். இப்படிக் காலத்தை அளப்பதற்குக் கதிரவன் உதவுகின்றான். அத்தகைய சூரிய சந்திரர்கள், எண்ணிறந்த பேர் இயற்கையில் தோன்றி, நிலைபெற்றிருந்து, தேய்ந்து பின்பு மறைந்து போய்விடுகின்றனர். சந்திர சூரியர்களுக்குப் பிறப்பகமாகிய பிரகிருதியே தோன்றவும் மறையவும் செய்கின்றது. இந்த பிரகிருதிக்கு ஆதாரமாயிருக்கும் சிதம்பரம் அல்லது அறிவுவெளி போக்கற்று, வரவற்று, உணர்வற்று இருக்கிறது. காலம் என்கின்ற எல்லை அப்பொருளுக்கு இல்லை. தேசம் என்கின்ற எல்லையும் அதற்குக் கிடையாது. நிமித்தம் அல்லது செயல்கள் என்கின்ற வரையறையும் அப்பரம்பொருளுக்குக் கிடையாது. காலதேச வர்த்தமானத்தைக் கடந்தது அது. எல்லையில்

அடங்காத அத்தகைய பெரிய பொருள் நம் பொருட்டு எல்லை உடையது ஆகவும் தன்னைக் காட்டிக் கொள் கிறது. வெட்ட வெளி எல்லையில் அடங்காதது. அத் தகையதை ஒரு ஜன்னல் வழியாகப் பார்க்கிறோம். ஜன்னல் என்பது ஒரு எல்லை. அதற்குள் அடங்காத பெருவெளி அதற்குள் அடங்கிவிட்டது போன்று தென் படுகிறது. சிதாகாசம் என்பது அகண்டாகாரப் பெரு வெளி. அது நமது உள்ளத்துக்குள் அடங்கியது போன்று தென்படுகிறது. எல்லையில்லாத பொருள் எல்லையில் அடங்கியிருப்பதாகக் காட்டிக் கொள்கிறது. அறிவுப் பொருள் நம் உள்ளத்தினுள் இருக்கிறது. ஆனந்தமும் நம் உள்ளத்தில் இருக்கிறது. உணர்வு இல்லாத உயிர் இல்லை. இன்பத்தை உணராத உயிர் இல்லை. உயிர்களிடத்து உணர்வு எல்லையில் அடங்கியது போன்று தோன்று கிறது. உயிர்கள் துய்க்கும் இன்பமும் ஒரு வரம்பில் அடங்கியதாகப் புலப்படுகிறது. அப்படிப் புலப்படுவ தால்தான் உயிர்கள் உணர்வையும், இன்பத்தையும் அனுபவிக்க வல்லவைகள் ஆகின்றன. ஒவ்வொரு உயி ரும் ஒரு எல்லைப் பொருளாகிறது. ஒவ்வொரு உயிரிடத் தும் இப்பரம்பொருள் இருக்கிறது. இந்த அகண்ட வஸ்து இத்தனை கண்டதுண்டங்கள் ஆனது போன்று தென் படுவது பெரு வியப்புக்குரிய விஷயமாகிறது. அப்படி அது தன்னை எல்லைக்குள் அடக்குவதாலேயே ஒவ்வொரு ஜீவனுடைய கருத்திற்கு இசைந்ததாகவும் அது இருக்கிறது. யாரெல்லாம் எப்படியெல்லாம் பாவிக்கின்றார்களோ அப்படியெல்லாம் அது அவர்களால் உணரப்படுகின்றது. ஜடப்பொருளாகிய பிரபஞ்சமாவதும் அதுவே. அப் பிரபஞ்சத்தினுள் ஜீவர்கள் என்னும் சிற்றறிவுப் பொருள்

கள் ஆனதும் அதுவே. சிற்றறிவுப் பொருள்களாகிய ஜீவர்களின் உள்ளத்தில் வீற்றிருக்கும் பேரறிவுப் பொருளும் அதுவே. அந்தப் பேரறிவுப் பொருளை எண்ணுமளவு ஜீவன் பரிபக்குவம் அடைந்து வருகின்றான். நாம ரூபங்களாகிய வடிவங்களில் கட்டுண்டு இருக்கும்பொழுதெல்லாம் அந்த ஜீவன் சிற்றுயிராய் விடுகின்றான். சரீரத்தில் இருக்கும்பொழுதே சரீரத்தின் உணர்வற்று, பேரறிவு மயமாய் அவன் இருப்பானாகில் அது வழிபாடு ஆகிறது. வெறும் தோற்றமாகிய உடலை மறந்திருத்தல் வேண்டும். உடலை மறந்தநிலை பெருநிலையாகிறது அப்பெருநிலையில் உள்ளம் விரிவடையுங்கால் அது கடவுள் வணக்கம் எனப்படுகிறது. உண்மையான கடவுள் வணக்கம் மனிதனைப் படிப்படியாக மௌனத்தின்பால் எடுத்துச் செல்கிறது. உடல் உணர்வோ ஓசை ஒளியில் கொண்டு சேர்க்கிறது. வியவகார நிலை என்பது அதுவே. பிரபஞ்சத்தில் கருத்தைச் செலுத்துமளவு வியவகாரம் வலுக்கிறது. அது ஓசைமயமானது. பரம்பொருளில் கருத்தைச் செலுத்துமளவு மோனம் ஓங்குகிறது. அது பாரமார்த்திகப் பெருநிலை. உலக வழக்குகளை மறந்து பரம்பொருளிடத்துள்ள சாந்தத்தைத் துய்ப்பது வணக்கமாகிறது. அந்த சாந்த நிலையை மனது கருதவல்லதாகுமானால் அப்படிக் கருதுவதே அஞ்சலியாகிறது. அஞ்சலி என்பதற்கும் வணக்கம் என்பதற்கும் பொருள் ஒன்றே. தெய்வத்தின் சொரூபத்தைக் கிரகித்து மனது அந்த் சொரூபத்தில் நிலைத்திருப்பதே வணக்கம். தொடர்ந்து மனது எதை நினைக்கின்றதோ அதன் மயம் ஆய்விடுகிறது அது. தெய்வத்தை நினைக்கின்ற மனது தெய்வத்தன்மை பெற்று விடுகிறது. உலகை நினைக்கின்ற

மனது உலகத் தன்மையைப் பெற்றுவிடுகிறது. தெய் வத்தை நினைப்பதற்கு முன்பு தெய்வத்தின் வடிவம் எத்தகையது என்பது புலப்படவேண்டும். அதன் வடி வத்தை விளக்குவதற்கே இப்பாடல் வந்து அமைந்துள் ளது. பாடலில் அமைந்துள்ளபடி தெய்வத்தின் வடிவை இனி கிரகிக்க முயலுவோம்:

அங்குஇங்கு எனாதபடி எங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததுஎது தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாம்

தங்கும்படிக்கு இச்சை வைத்து உயிர்க்கு உயிராய்த்
தழைத்ததுஎது மனவாக்கினில்
தட்டாமல் நின்றதுஎது சமயகோ டிகளெலாம்
தன்தெய்வம் என்தெய்வமென்(று)

எங்கும் தொடர்ந்துஎதிர் வழக்கிடவும் நின்றதுஎது
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கு முள்ளதெதுமேல்

கங்குல்பகல் அறநின்ற எல்லையுளது எதுஅது
கருத்திற்கு இசைந்ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவும்
கருதிஅஞ் சலிசெய்குவாம்.

## இரண்டாவது பாடல்

பரம்பொருள் எது, ஜீவாத்மா எது, இவ்விரண்டுக்குமுள்ள இணக்கம் யாது என்பதை விளக்குவதே மஹா வாக்கியம். அத்தகைய மஹா வாக்கிய விளக்கம் திருவருள் விலாசப் பரசிவ வணக்கம் என்னும் தலைப்பிலுள்ள மூன்று பாடல்களில் அமைந்திருக்கிறது. இரண்டாம் பாடலில் ஜீவதத்துவம் விளக்கப்பெறுகிறது. ஜீவன் ஒருவனுக்கு ஊர் அனந்தம். ஒவ்வொரு மனிதனும் தனக்குச் சொந்த ஊர் ஏதேனும் ஒன்றை வைத்துக்கொண்டு மற்றவைகளைப் புறக்கணிக்கின்றான். அப்படி அவன் சொந்தம் பாராட்டுவது ஒரு ஜன்மத்துக்குரிய ஊர் ஆகின்றது. உண்மையில் அவன் ஓர் ஊரான் அல்லன். அவனுக்கு ஊர் அனந்தம். அரசாங்கத்தில் உத்தியோகம் வகிக்கும் ஒருவன் ஓர் ஊரிலேயே சர்வகாலமும் உத்தியோகம் வகிப்பதில்லை. சில ஆண்டுகளுக்கு ஒருதடவை ஊர் மாறிப் போகின்றான். அவனுடைய உத்தியோக காலம் முடிவுக்கு வந்தான பிறகு 'நீ எந்த ஊரில் உத்தியோகம் புரிந்தாய்?' என்று கேட்டால் 'உத்தியோகம் புரிந்த ஊர்கள் பல' என்பான் அவன். ஒவ்வொரு ஜீவனும் அத்தகைய பாங்கில் இருக்கின்றான் என்பது அந்த ஜீவனுக்குத் தெரியாது. இந்த மண்ணுலகம் மட்டும் ஜீவர்கள் வசிப்பதற்குரிய இடம் என்னும் மயக்கம் நமக்கு வந்து விடலாகாது. இம்மண்ணுலகைப் போன்று எண்ணிறந்த உலகங்கள் அகண்டாகார வெட்டவெளியிலே மிதக்கிக்கொண்டிருக்கின்றன. பிறவிதோறும் ஒரே மண்ணுலக்குக்கு வந்தாலும் அம்மண்ணுலகில் ஒரே ஊரில்

பிறப்பதில்லை. வெவ்வேறு உலகங்களிலே, வெவ்வேறு ஊர்களிலே ஜீவர்கள் சென்று பிறப்பெடுக்கின்றனர். ஒரு பிறவியிலேயே ஜீவனுக்குச் சொந்தமாயிருக்கும் ஊர்கள் பல என்பது எண்ணிப் பார்த்தால் விளங்கும். தாயின் வயிற்றில் கர்ப்பாசயத்தில் தங்கியிருக்கின்றபொழுது குழவிக்கு கருவூர் சொந்தம். ஒரு ஜீவனுக்குத் தாய் பறவையாய் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். தாயின் கருவூருக்குள் வசிக்கும் ஜீவன் அதைவிட்டு வெளியில் வந்தானபிறகு அந்த ஜீவனுக்கு முட்டை சொந்த ஊர் ஆகின்றது. பறவையின் முட்டை ஒன்றை வெவ்வேறு ஊர்களுக்கு எடுத்துச் செல்லலாம். முட்டை ஒன்று இடம் மாறி எடுத்துச் செல்லப்படும் பொழுதெல்லாம் அம் முட்டையிலிருக்கும் ஜீவனுடைய ஊர் வெவ்வேறு ஆகின்றது. அதற்கிடையில் தான் வசித்து வரும் முட்டை ஓட்டையே தன் சொந்த ஊர் என்று முட்டையினுள் உள்ள உயிர் நினைத்துக் கொள்ளுமாகில் அதில் குற்றம் ஒன்றுமில்லை. குஞ்சாக அந்த ஜீவன் பொரிக்கும்பொழுது முட்டை என்னும் ஊரை உடைத்துத் தள்ளிவிட்டு வெளியில் வருகிறது. ஒரு நாளைக்கு முன்பு சொந்த ஊர் என்று ஒரு முட்டை ஓட்டை அது நினைத்துக் கொண்டிருந்தது. அந்த ஓட்டினுள் அக்குஞ்சு ஒரு வெளிச்சத்தையும் கண்டிலது. காற்றையும் வெட்டவெளியையும் அது கண்டிலது. தனக்கு உதவிபுரியும் நண்பர்களையும், தனக்கு கேடு செய்யும் எதிரிகளையும் அது கண்டிலது. அடுத்த நாள் முட்டை ஓட்டை உடைத்துக் கொண்டு வெளியே வந்தான பிறகு அது வெளிச்சத்தைக் காணவல்லது ஆகிறது. சூரியனையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும், அக்னியையும் அது கண்கூடாகக் காண்கிறது.

சொந்த ஊர் என்பதைப் பற்றிய விசித்திரம்தான் என்ன? முட்டை ஓடு என்னும் சொந்த ஊரைத் தாண்டி மண்ணுலக வாழ்வு என்னும் சொந்த ஊருக்கு வந்த பிறகு வாழ்க்கை எவ்வளவு விரிவடைகிறது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். ஜீவனுக்கு அமைகின்ற நண்பர்களும் பகைவர்களும் அந்த ஜீவனுடைய முன்னேற்றத்துக்குக் காரணங்கள் ஆகின்றார்கள். முட்டை என்னும் சொந்த ஊரைவிட்டு வெளியில் வரமாட்டேன் என்று குஞ்சு ஆகிய ஜீவன் அடைபட்டிருக்குமானால் அதன் முன்னேற்றத்துக்கு முகாமை இல்லாது போய்விடுகிறது. இக் கோட்பாடு எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. ஆகவே ஒவ்வொரு ஜீவனுக்கும் சொந்தமாயுள்ள ஊர் அனந்தம் என்பதை எண்ணிப் பார்ப்பது அவசியமாகிறது.

இருக்கும் இடத்தையும், காலத்தையும், செய்கின்ற வேலையையும் அனுசரித்து ஒரே ஜீவனுக்கு கணக்கற்ற பெயர்கள் அமைகின்றன. தாயின் வயிற்றிலிருக்கும் பொழுது அந்த ஜீவனுக்கு கரு என்பது பெயர். பிறந்தவுடன் அதற்கு சிசு என்பது பெயர். பின்பு ஆண் குழந்தை அல்லது பெண் குழந்தை எனப் பெயர் வருகிறது. சிறுவன், சிறுமி என்று மேலும் அது மாறுகிறது. யுவன், யுவதி எனவும் அது வடிவெடுத்துவிடுகிறது. கணவன், மனைவி, தந்தை, தாய், கிழவன், கிழவி இப்படியெல்லாம் நாளடைவில் பேர் மாறுகிறது. இன்ன ஊரான், இன்ன தேசத்தான், இன்ன மொழி பேசுபவன் இப்படியும் பேர் மாறுகிறது. ஊரை முன்னிட்டு ஜீவனுக்கு மாறிய பெயர்களில் சில பிரசித்திபெற்று விடுகின்றன. வாதவூரான் என்பது அத்தகையதொன்று. பேசும் மொழியை முன்னிட்டு சில ஜீவர்க்குப் பெயர் அமைகிறது. தமிழ்

மறையவன் என்பது அத்தகையதொன்று. வண்டியில் ஊர்ந்து செல்லும் பொழுது ஒரு ஜீவனுக்கு பிரயாணி என்னும் பெயர் வருகிறது. ஜனத்தொகையில் எண்ணிக்கை எடுக்கும்பொழுது மானுடன் என்னும் பெயர் வருகிறது. க்ஷேத்திரத்துக்குப் போகும் ஜீவன் ஒருவன் யாத்திரை வாசி எனப்படுகிறான். தொழிலை முன்னிட்டு வர்த்தகன் என்றும், கிருஷிகன் என்றும், ஓதுபவன் என்றும், வேலையாள் என்றும், வெட்டியான் என்றும் பற்பல பெயர்கள் ஜீவனுக்கு வந்தமைகின்றன. வடிவத்தை முன்னிட்டு நெட்டையன் என்றும், கட்டையன் என்றும், குட்டையன் என்றும் மனிதன் அழைக்கப்படுகின்றான். விற்பனைக்கோ அல்லது வேறு காரியத்துக்கோ உடைத்திருக்கும் பொருள்களை முன்னிட்டு மனிதன் விறகு என்றும், கூடை என்றும், மூட்டை என்றும் அழைக்கப்படுகிறான். இங்ஙனம் ஜீவர்கள் பெற்ற பேர் அனந்தம்.

தன்னந்தனியர்களாக ஜீவர்கள் உலகில் வந்திருந்து யாருடனும் இணக்கம் கொள்ளாது இவ்வுலகத்தை விட்டுப் போய்விடுவதில்லை. ஒவ்வொரு ஜீவனையும் வெவ்வேறு தரப்பட்ட சுற்றம் சூழ்ந்து கொண்டே இருக்கிறது. கைக்குழந்தை ஒன்றனுக்குத் தாதிமார் போன்றவர்கள் நெருங்கிய உறவினராக சூழ்ந்திருக்கின்றனர். ஓடி விளையாடும் குழந்தைக்கு மற்ற குழந்தைகள் உறவினர் ஆய்விடுகின்றனர். பள்ளிக்குப் போகும் பொழுது உடன் படிப்பவர்கள் உறவு கொண்டாடுகின்றனர். மணம் புரிந்து கொள்ளும்பொழுது உண்டாகும் உறவினர் ஒரு கூட்டத்தார் ஆகின்றனர். உத்தியோகம் வகிக்கின்றபொழுது அதற்கேற்ற உறவினர் வந்தமைந்து விடுகின்றனர். கற்றவர்களுக்கிடையில்

உண்டாகும் இணக்கம் ஒருவித உறவு. கயமை வடிவெடுத் திருப்பவர்களுக்கிடையில் அமையும் உறவு இன்னொரு விதமானது. சோம்பித் திரிப்வர்களுக்கிடையில் மற்றொரு வகை உறவு உண்டாகிறது. பணம் படைத்திருப்பவனை சூழ்ந்திருப்பவர் ஒரு சாரார். செந்நெறி சார்ந்திருப்பவரை மற்றொருவிதக் கூட்டம் உறவாடுகிறது. இங்ஙனம் உயிர்களுக்குச் சுற்றும் உறவும் அனந்தம் எனச் செப்புதல் வேண்டும்.

இனி, ஜீவன் எடுக்கின்ற உடலமைப்போ எண்ணிக் கையில் அடங்காதது. புல் முதல் பிரம்மா பரியந்தம் உள்ள உயிர்கள் அனைத்தும் ஜீவர்கள் எனப்படுகின் றனர். ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய அவர்கள் எடுத்திருக்கும் உடல் அனந்தம். நரர் தேவர் ஆகிய அனைவரும் இதில் அடங்கி விடுகின்றனர். இத்தனைவித உடல் அமைப்புகள் அவர்களுக்கு எப்படி உண்டாயிற்று என்னும் கேள்வி எழலாம். அவரவர் வினைப்பயனுக்கு ஏற்ப உடல்கள் மாறியமைகின்றன. மரம் செடி கொடிகள் செய்யும் கர்மம் ஒருவிதமானது. அக்கர்மத்துக்குத் தகுந்த உடல்கள் அவைகளுக்கு அமைகின்றன. புழுப் பூச்சிகள் செய்யும் வினை வேறு ஒருவிதமானது. அவ்வினைக்குத் தகுந்த உடலமைப்பு அவைகளுக்கு ஏற்படுகின்றன. பறவைகளும் விலங்குகளும் தத்தம் பாங்குகளுக்கு ஏற்ப வினையாற்று கின்றன. அதற்குத் தகுந்த உடலமைப்பும் அவைகளுக்கு வந்துவிடுகின்றன. நீர் வாழ்பவைகளுக்கும் அவைகளின் செயலுக்குத் தகுந்த சரீரங்கள் அமைகின்றன. மக்களுக்கும் அதே கோட்பாடு உடன்பாடாகிறது. விதவிதமான காரி யங்களை மக்கள் செய்து வருகிறார்கள். ஆகவே இத் தனைகோடி உயிர்வகைகள் செய்யும் வினையனந்தம்.

உயிர் வகைகளை வினைகளில் தூண்டுதற்கான விசை வேறு ஏதாவது உண்டா என்னும் கேள்வி எழலாம். யந்திரங்களை வெவ்வேறு விசைகள் இயக்குவது போன்று உயிர்வகைகளை வினையிலே ஈடுபடுத்தும் விசை ஒன்று உண்டு. அதற்குக் கருத்து அல்லது எண்ணம் என்று பெயர். கருத்து அலாதியாக மனிதனுடையது என்று எண்ணலாகாது. கருதும் தன்மை புல்முதல் பிரம்மா பரியந்தம் எல்லா உயிர்களுக்கும் உண்டு. தனது கருத்தை நிறைவேற்றிக் கொள்ளுதற்கு கல்லுக்கு அடியிலிருக்கும் விதை ஒன்று செடியாக முளைத்து நாலாபக்கமும் தொட்டு ணர்ந்து ஏதேனும் ஒரு புறத்தில் கல்லுக்கு வெளியே வெளிச்சத்தையும் காற்றையும் பெற வெளித்தோன்றி வருகிறது. அதன் அமைப்புக்கேற்ற கருத்து அதனிடத்தி ருக்கிறது. ஊர்வன, நடப்பன, நீந்துவன, பறப்பன ஆகிய உயிர்கள் அனைத்தும் அதனதன் கருத்துக்கு ஏற்ப வினையாற்றி வருகிறது. மனிதன் நல் வினையாற்றுவது அதற்கேற்ற கருத்தினால் தூண்டப்பட்டேயாம். தீவினை யாற்றுவதும் அதற்கேற்ற கருத்தினால் தூண்டப்பட்டே யாம். சான்றோர்க்கிடையிலும் கருத்து ஒரே அச்சில் அமைவதில்லை. எத்தனை உயிர்களோ அத்தனை கருத் துக்கள் இருக்கின்றன என்று முடிவு கட்டலாம். ஆதலால் கருத்தோ அனந்தம் என்கிறார் தாயுமானவர்..

பேர் என்னும் சொல் பெரிய எனப் பொருள்படு கிறது. சீர் என்னும் சொல் சிறப்பு எனப் பொருள்படு கிறது. பெற்ற பேர் சீர் அனந்தம் என்பது இச்செய்யுளில் அமைந்த கோட்பாடு. ஜீவர்கள் பெறும் சிறப்புக்களை அப்போதைக்கப்போது பெற்று அனுபவித்திருக்கின்

றனர் என்னும் அர்த்தம் இதில் அடங்கியிருக்கிறது. புல் ஒன்று கடவுள் வழிபாட்டுக்குப் பயன்பட்டபொழுது அது தன்னளவில் பெரிய சிறப்பைப் பெற்றது. கல் ஒன்று விக்கிரகத்தை இழைப்பதற்குப் பயன்பட்டபொழுது அதற்கேற்ற பெரிய சிறப்பை அது பெற்றது. கண்டு அதிசயிக்கத் தக்க அழகிய உருவங்களைச் சிற்றுயிர்களும், மீன் வகைகளும், பறவை வகைகளும் பெற்றிருப்பதைக் கண்கூடாகக் காண்கின்றோம். அவைகளில் சில கிளப்பும் ஓசை இனிமையே வடிவெடுத்ததாகிறது. அத்தகைய சிறப்பும் அவ்வுயிர் வகைகளுக்கு உரியதாகிறது. ஆரா யுங்கால் ஒவ்வோர் உயிரும் தன்போக்கில் இப்பிரபஞ்ச அமைப்பிலே பெரிய சிறப்பைப் பெற்றிருக்கிறது என்று உறுதி கூறலாம். இவ்வுயிர் வகைகளுள் மனிதனும் பெரும் சிறப்பைப்பெற வல்லவனாகின்றான். நடமாடும் தெய் வம் என்று அவனைப் போற்றுதற்குரிய பெரிய நிலையைத் தன் முயற்சியால் அவன் பெறக்கூடும். ஆகவே பெற்றபேர் சீர் அனந்தம் என்னும் கோட்பாடு தாயுமானவர் உள்ளத் தினின்று ததும்பிக்கொண்டு வெளிவருகிறது.

சொர்க்கம் எங்கே இருக்கிறது, நரகம் எங்கே இருக் கிறது என்னும் கேள்வி எல்லார்க்கிடையிலும் எழுகிறது. அது இம் மண்ணுலகைச் சார்ந்ததல்ல; சொர்க்கம் என்பது இதற்குமேல் எங்கேயோ இருக்கிறது. நரகம் என்பது இதற்குக் கீழ் வேறு எங்கேயோ இருக்கிறது எனப் பலர் பொருள்படுத்துகின்றனர். அப்படிப் பொருள்படுத்துவது உண்மைக்கு ஒவ்வாது. இம்மண் ணுலகிலேயே சொர்க்க வாழ்வு வாழ்கின்றவர் இருக் கின்றனர். இம்மண்ணுலகிலேயே நரகவேதனை அடை கின்றவரும் இருக்கின்றனர். இன்பம் தரும் மனநிலை

சொர்க்கமெனப்படுகிறது. துன்பம் தரும் மனநிலை நரகமெனப்படுகிறது. உண்மையில் சொர்க்கமும், நரகமும் அவரவர் மனநிலைக்கு ஏற்ப அவரவர் மனத்தகத்தே இருக்கிறது. சூழ்நிலையை சொர்க்கம் போன்று அமைத்துக் கொள்பவர் மேலோர். சூழ்நிலையை நரகம் போன்று அமைத்துக் கொள்பவர் கீழோர். தனக்குத்தானே சொர்க்கத்தையும் நரகத்தையும் சிருஷ்டித்துக் கொள்ளும் இயல்பு சிற்றுயிர் பேருயிர் ஆகிய எல்லா உயிர்களிடத்தும் இருக்கிறது. நாய் ஒன்று நல்ல எஜமானனிடத்து வாழ்ந்து வரும்பொழுது தன் கடமையைச் செய்து வருவதற்கிடையில் சொர்க்கவாசம் போன்ற வாழ்வைப் பெறுகிறது. வீதியில் சுற்றித்திரியும் மற்றொரு நாய் தன் கடமையைச் செய்வதற்கிடையில் மலத்தைத் தின்று மக்களிடம் அடியுண்டு நரகவேதனைப்படுகிறது. மனிதன் ஒருவன் எங்குச் சென்றாலும் தனக்கு உபத்திரவத்தை உண்டுபண்ணிக் கொள்கின்றான். வேறு ஒருவன் கீழ் மக்களுக்கிடையில் வசிக்க நேரிடுமிடத்தும் அவர்களோடு நல்லிணக்கம் வைத்து இன்புற்று வாழ்கின்றான். மனநிலைக்கு ஏற்ப மேன்மையும், கீழ்மையும் வந்தமைகின்றன. ஆதலால் சொர்க்க நரகமும் அனந்தம் என்று இயம்பப்படுகிறது.

ஒவ்வோர் உயிரும் தான் அடைந்துள்ள நிலையை விட உயர்ந்ததொரு நிலையை அடைய முயன்று வருகிறது. தான் அடையவேண்டிய உயர்நிலையை தெய்வ வடிவமென அந்த் உயிர் உருவகப்படுத்துகிறது. ஆக, மேல்நிலை என்னும் லக்ஷியம், ஒன்று பாக்கியில்லாது எல்லா ஜீவர்களுக்கும் உண்டு. தான் அடைய வேண்டிய மேல் நிலையை விலங்கு ஒன்று தன் இயல்புக்கு ஏற்பக் கற்பித்துக்கொள்கிறது. பறவை ஒன்று தன் பாங்குக்கு

ஒப்ப அதைக் கற்பித்துக் கொள்கிறது. மனிதனும் தனது பரிபக்குவத்துக்கு ஒப்ப மேலாம் லக்ஷியம் ஒன்றை நிர்ணயிக்கின்றான். இங்ஙனம் உயிர்கள் நாடும் உயர்ந்த லக்ஷியமே நல்ல தெய்வம் எனப் பெயர் பெறுகிறது. மனிதனால் கற்பிக்கப்படும் தெய்வ சொரூபங்கள் எண்ணிக்கையில் அடங்கா. அவரவர் மனப்பான்மைக்கு ஒப்ப தெய்வத்திடம் சிறப்பைக் காண்கின்றனர். கொடூரத் தன்மை நிறைந்த துஷ்ட தேவதைகளைச் சிலர் வழிபடு தெய்வங்களாக ஏற்றுக் கொள்கின்றனர். அத்தகையவை எப்படி நல்ல தெய்வமாகும் என்னும் கேள்வி எழலாம். துஷ்ட தெய்வத்தை வணங்கும் பாமரன் ஒருவன் தான் வழிபடும் தெய்வமானது தனது போக்கிரித்தனத்தையும் பிறரைப் பண்படுத்துதற் பொருட்டே கையாண்டு வருகிறது என்பான். உயிர்களை ஒழுங்குப் படுத்துதற்கென்றே தெய்வங்கள் பலவிதமான செயல்களைப் புரிகின்றன என்று மக்கள் கருதி வருகின்றனர். தெய்வத்தினிடத்து துஷ்டத்தனம் போன்று தென்படுவது உண்மையில் துஷ்டத்தனம் அல்ல. மனிதனை மேலோனாக திருத்தி அமைப்பதற்கே தெய்வம் கண்டிப்பான நடவடிக்கையெடுத்துக் கொள்கிறது என்று மனிதன் நம்புகிறான். அப்படி நலன் தருபவைகளை வணங்குவதே மக்களின் இயல்பு. ஆதலால்தான் நற்றெய்வமும் அனந்தும் என்கின்றார் தாயுமானார்.

தெய்வ வழிபாடு பல்வேறு வடிவெடுக்கிறது. உணவைச் சமைப்பதில் மக்கள் எப்படி விதவிதமான முறைகளைக் கையாளுகின்றனரோ அங்ஙனம் கடவுள் வழிபாட்டிலும் கணக்கற்ற உபாயங்களை அவர்கள் கையாளுகின்றனர். குறிப்பிட்ட ஏதேனும் ஓர் உபாயம்

ஒரு சமயம் எனப் பெயர் பெறுகிறது. இரண்டு சமயங்கள் முற்றும் ஒன்றோடு ஒன்று ஒத்து இருப்பதில்லை. முற்றிலும் ஒத்திருந்தால் அவைகளை இரண்டு சமயங்கள் எனலாகாது. வேறுபடுமிடத்தே ஒவ்வொரு சமயமும் தனிப்பெயர் பெறுகிறது. அப்படி மதங்களிடத்து பேதம் ஏராளமாய் இருப்பது பாராட்டத்தக்கது. மனப்பான்மைகள் எத்தனை எத்தனை விதங்களில் அமைந்திருக்கின்றன என்பதை வேறுபடும் சமயங்கள் விளக்குகின்றன. அவைகளையெல்லாம் நடுநிலை வகித்து ஆராய்கின்ற ஞானி, பேதந்திகழ்கின்ற சமயமும் அனந்தம் என்கின்றான். இவைகளின் உண்மையைக் கண்டறிகிறவர்கள் மதங்களுக்கிடையில் உயர்வு தாழ்வு பாராட்டமாட்டார்கள். எல்லா உயிர்களும் விதவிதமான மதங்களை அனுஷ்டித்துத் தெய்வத்தை வழுத்தி வருகின்றன என்று உணர்வார்கள். 'அதனால் ஞான சித் சக்தியால் உணர்ந்து' என்னும் கூற்று இக்காரணத்தை முன்னிட்டே தோன்றி இருக்கிறது.

சமய அனுஷ்டானத்தில் படிப்படியாக மேல் நிலைக்குப் போகின்ற சாதகர்கள் மதபேதத்தை முன்னிட்டு மனக்குழப்பம் கொள்ளார். மத பேதத்தை முன்னிட்டு மக்களுக்கிடையிலே மனக்கசப்பையும் உண்டுபண்ணமாட்டார்கள். அனுஷ்டிக்கும் சமயம் எதுவாயினும் அதன் மூலம் சாதகனுக்கு அருள்தாகம் உண்டாக வேண்டுமென்று எடுத்து ஓதுவார்கள். ஜீவர்கள் வெவ்வேறு பாங்குகளிலே பக்குவம் அடைந்து வருவதெல்லாம் கடைசியாக கடவுள்மீது பேரன்பு கொள்ளுதல் பொருட்டேயாம். கடவுள்மீது அன்பு கொண்டு அவரை அடையவேண்டும் என்கின்ற நாட்டம்

வரும்பொழுது ஜீவன் தலைசிறந்த ஜீவன் ஆய்விடுகிறான். கடவுளை அடையவேண்டும் என்று உணர்ந்து அவன் கண்ணீர் சிந்தும்பொழுது அவனுடைய பரிபாகம் மிக மேலானது ஆய்விடுகிறது. அவன் சிந்துகின்ற கண்ணீரை இயற்கை பொழிகின்ற பெருமழையோடு ஒப்பிடலாம். மழை பெய்வதால் உயிர்கள் அனைத்தும் இன்பம் அடைகின்றன. மழையின் மூலம் அவைகளுக்குப் புதிய உணவு வருகிறது. புதிய உணவு புத்துயிரை ஊட்டுகிறது. உயிர் வகைகள் உலகிலே நிலைபெற்றிருப்பதற்கு மழையே கண்கூடாகக் காணும் காரணமாகிறது. பெருமழை பெய்வது உலகத்தை உய்விப்பது போன்று அன்பர் களுடைய கண்களினின்று வடியும் அருள் நாட்டக் கண்ணீர் ஆன்மாவுக்குப் புத்துயிர் தருகிறது. அப் புத்துயிர் பரம்பொருளிடத்து வைக்கும் தொடர்பால் ஏற்படுகிறது. அதனால் உயிருக்கு ஆனந்தமும் அதிகரிக் கிறது. புற உலகிலே கார்மேகம் மழையாக வர்ஷிப்பது போன்று மனத்தகம் என்னும் வெளியிலே இறைவனு டைய கருணை என்னும் முகில் இருந்துகொண்டு அருள் நாட்டம் என்னும் மழையைப் பொழியச் செய்கிறது. அத்தகைய மழையின் மகிமை உலக விஷயங்களில் அழுந்திக் கிடக்கும் ஜீவர்களுக்கு விளங்காது. அவர் களுடைய கருத்துக்கு அது அரிதிலும் அரிதாய் விடுகிறது. பரிபக்குவம் அடைந்த ஜீவனே கருணை என்னும் மேகத்தை மனத்தகத்துக் காணவும், அது மழையாகப் பொழியும்படி அருள்தாகமெடுத்து அதை வேண்டவும் செய்கின்றான். அவ்வனுடைய கண்களினின்று அப் பொழுது அது அருள்நாட்டக் கண்ணீராகப் பெருகு கிறது. இக்கோட்பாட்டை 'கார் அனந்தங் கோடி வரு

ஷித்தது என அன்பர் கண்ணும் விண்ணும் தேக்கவே' என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

ஒருவன் உணவு உண்ணாது வாழ்ந்து வருகின்றான். நெடுநாள் அவனுடன் பழகியும் ஒருநாளாவது அவன் உணவு உண்டது தென்படவில்லை. அப்படியிருந்தும் அவன் புஷ்டி நிறைந்த உடல் படைத்தவனாய் இருக் கிறான். உணவு உண்ணாது உடல் புஷ்டி படைத் திருப்பது சாத்தியமா என்னும் கேள்வி எழுகிறது. மறை முகமாக ஏதேனும் ஒரு விதத்தில் இவன் உணவு உண் கின்றான் என்றே தீர்மானிக்கவேண்டும். அப்படித் தீர்மா னிப்பது யுக்திக்குப் பொருத்தமானது. உடல் புஷ்டி உணவினின்று வருவது போன்று உள்ளத்தின்கண் ஆனந்தம் மேலிடுகிறது. இந்த ஆனந்தத்துக்குப் பிறப் பிடம் எது? ஆனந்தம் எல்லா உயிர்களுக்கும் பொது வானது. ஆனந்தத்தை அறியாத உயிர் இல்லை. ஆனந் தத்தைப் பெருக்க முயற்சி எடுத்துக் கொள்ளாத உயிர் இல்லை. ஆனந்தம் மேலும் மேலும் பெருகவேண்டும் என்றே உயிர்கள் அதை நாடித் திரிகின்றன. இந்த ஆனந் தம் மற்ற உயிர்களுக்கு உலகப் பொருளைச் சார்ந்ததாக இருக்கிறது. ஆனால் அருள்தாகம் கொண்டு கண்ணீர் சிந்துகின்ற உயிர்களுக்கு இந்த ஆனந்தம் உள்ளிருந்தே ஊற்றெடுக்கின்றது. அது கருத்துக்கு எட்டாத தூய ஆனந்தம். அந்த ஆனந்தம் வேறு பரம்பொருள் வேறு அல்ல. தூய பேரானந்தமே பரம்பொருள். பரம்பொ- ருளே கருத்துக்கு எட்டாத பேரானந்தம் ஆகிறது. கார்மேகம் சூழ்ந்துவந்து மழையாகப் பொழிவது போன்று இப்பேரானந்தம் மனத்தகத்து மழைபோன்று உருவெடுத்து மகிழ்வூட்டுகிறது. இக்கோட்பாட்டையே

தாயுமானவர் 'கருது அரிய ஆனந்த மழை பொழியும் முகிலை' என்கின்றார்.

நம் சொரூபத்துக்கு நாம் அன்னியராகிவிட முடியாது. பாம்பின் மேல்சட்டை ஒரு தருணத்தில் பாம்புக்கு அன்னியமாய் விடுகின்றது. அப்படி அது அன்னியப் பொருளான பிறகு அது பாம்பின் சொரூபமாகாது. ஆனந்த சொரூபமாகிய கடவுள் என்றைக்கும் நமக்கு அன்னியமாவதில்லை. ஜீவன் பரிபாகமடைந்து வருமளவு அப்பேரானந்தப் பொருளே தனக்கு மூலப்பொருள் என்பதை உணர்கின்றான். தான் வேறு, ஆனந்தம் வேறு அல்ல. ஆதலால் அந்த ஆனந்தத்தை நாம் கடவுள் என்றழைப்பது பொருந்தும்.

உஷ்ணம் என்னும் சக்தி வெவ்வேறு பொருள்கள் மூலம் தன்னை விளக்க முடியும். காற்றினுள் வியாபித்திருந்து வெப்பம் தன்னை விளக்குகிறது; நீரினுள் பரவியிருந்து தான் இருப்பதை விளக்குகிறது. நிலத்தினுள் பாய்ந்தும் உஷ்ணமானது தன்னைக் காட்டிக் கொள்கிறது. சுடுமணலில் நடக்கும்பொழுது நமக்கு உண்டாகும் அனுபவமே அதற்குச் சான்று ஆகும். ஆனால் பஞ்ச பூதங்களுள் அக்னி என்னும் பூதம் உஷ்ண சொரூபமானது. உஷ்ணத்துக்கு புறம்பாக அக்னி இல்லை. அக்னிக்குப் புறம்பாக உஷ்ணம் இல்லை. தனது யதார்த்த நிலையே அக்னி என அழைக்கப்படுகிறது. துரியம் என்பது அத்தகையது. உயிர் வாழ்க்கையைப் பற்றிய உணர்வு பல்கோடி ஜீவர்களிடத்து பல்கோடி வடிவங்களில் தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறது. இந்த வடிவங்களிளெல்லாம் கட்டுப்படாது முற்றிலும் தன்மயமாய் இருக்கின்ற பேர் உணர்வுக்குத் துரியம் என்று பெயர். பரிபாகம்

அடைந்து வரும் ஜீவன் அத்தகைய பேர் உணர்வு வடிவை எடுத்துவிடுகின்றான். ஆகவே, அந்நிலை துரிய வடிவு எனப் பெயர் பெறுகிறது.

இத்தகைய தூய உணர்வு அறிந்துகொள்ளுதற்கு மிக எளியது. உஷ்ணத்தை நாம் உணர்வது போன்று உணர்வு மயமான நாம் உணர்வை அறிந்து கொள்ளுதலில் கஷ்டம் யாது உளது? ஆயினும் அதை அறிந்து கொள்ள இயலாது நாம் மயங்கித் திரிவதுதான் விந்தைக்குரிய விஷய மாகிறது. நமக்கு இயல்பாயுள்ள இந்த எளிய நிலையை வெவ்வேறு விதங்களில் விளக்க வேதங்கள் முயன்று வருகின்றன. உணர்வு என்றும், அறிவு என்றும், பேர் அறிவு என்றும், பிரக்ஞை என்றும், பிரக்ஞானம் என்றும், சித்பொருள் என்றும், சேதனப் பொருள் என்றும், சுத்த சைதன்யம் என்றும் இதற்குக் கணக்கற்ற பெயர்களை வேதங்கள் வைத்துள்ளன. அத்தனைவிதப் பெயரிட்டு அழைத்தும் அது ஜீவனுக்கு மறைபொரு ளாய்க் கிடக்கின்றது. மறைந்து கிடக்கின்ற பொருளை விளக்குகின்ற நூலுக்கே மறை என்னும் பெயர் வந்தது. எத்தனை எத்தனை விதங்களிலோ இந்த மறைபொருளை வெளிப்படைப் பொருளாக்க நூல்கள் முயன்று வரு கின்றன. வேதங்கள் சொல்லுகின்ற அத்தகைய முயற்சி களைப் பேர் அனந்தம் பேசி மறை அனந்தம் சொல்லும் பொருள் எனத் தாயுமானவர் பகர்ந்துள்ளார்.

இப்படி வேதங்களையெல்லாம் அதற்குக் கணக்கற்ற பெயரிட்டிருப்பதால் அப்பொருளை உள்ளபடி சுட்டிக் காட்டி விட்டனவா, என்னும் கேள்வி எழலாம். இல்லை; அத்தனை விதப் பெயர்கள் வைத்தும் அதைச் சுட்டிக் காட்ட வேதங்களுக்கு இயலாது போய்விட்டது. அதற்குத்

தகுந்த காரணமும் ஒன்று உண்டு. மேளம், தாளம், அருவி முதலிய் சொற்களை சொல்லுகின்ற இடத்து அவைகள் ஒலிக்கின்ற ஓசையைக் குறித்தே அச்சொற்களும் வந்து விடுகின்றன. இடி இடிக்கிறது என்று சொல்லும் பொழுது சப்தத்தையும் கேட்கின்றோம்; அதற்குரிய கருத்தும் மனதில் பாய்கிறது. ஆகவே பிரபஞ்சப் பொருள்கள் யாவும், பிரபஞ்ச நிகழ்ச்சிகள் யாவும், ஓசையும் ஓசை யினுடைய புறத்தோற்றமாகவும் அமைந்திருக்கின்றன. அவைகளைச் சொல்லில் விளக்குதல் எளிதாய் விடு கின்றது. ஆனால் பேரறிவுப் பொருளாகிய துரியமோ ஓசை யாவையும் கடந்தது. அதனிடத்திருந்து ஒருவிதமான ஒலியும் தோன்றுவதில்லை. பெரிய மௌனத்தின் வைப்பு என்றுதான் அதை இயம்பவேண்டும். ஊமையன் கண்ட கனவை அவன் எங்ஙனம் சொல்லால் விளக்க முடியாதோ அங்ஙனம் இந்தத் துரிய நிலையைச் சொல்லால் விளக்க முயலுதல் பொருளற்ற முயற்சியாய் விடுகின்றது. பெரிய மௌனத்தின் வைப்பு என்பதற்குமேல் அதைப்பற்றி பகரு தற்கு ஒன்றுமில்லை. பேச்சுக்கு எட்டாத நிலை அது. பேருணர்வு ஒன்றே ஆங்கு நிலைத்திருக்கின்றது. அதைப் பேரானந்தம் என்றும் பகரலாம். கிரணங்கள் போன்று அதன் தோற்றங்களாக வந்தவைகள் உயிர்கள் யாவும். சூரியனுக்கு அன்னியமாகக் கிரணங்கள் இருக்க முடியாது. சூரியன் மூலப்பொருள். அதனுடைய தோற்றங்கள் கிர ணங்கள்.ஞான ஆனந்தம் பெரிய மூலப்பொருள். அதன் தோற்றங்கள் ஜீவர்கள். தங்களுடைய மூலஸ்தானத்தை நினைத்து அந்த நினைவிலே நிலைபெற்றிருப்பதே நல்ல வழிபாடு ஆகும். இக்கருத்தையே 'பேசரும் அனந்த பதம் ஞான 'ஆனந்தமாம் பெரிய பொருளைப் பணிகுவாம்'

என்கின்றார் தாயுமானவர். ஜீவர்கள் தமது அமைப்புக்கு மூலகாரணமாய் இருப்பதை எண்ணி அந்த எண்ணத்தில் நிலைபெற்றிருப்பது நல்ல வணக்கமாகிறது என்பது பொருள். இத்தனை கருத்துக்களையும் படம் பிடித்துக் காட்டும் பாடலாவது:

ஊரனந் தம்பெற்ற பேரனந் தம்சுற்றும்
உறவனந் தம்வினையினால்
உடலனந் தம்செயும் வினையனந் தம்கருத்
தோஅனந் தம்பெற்றபேர்
சீரனந் தம்சொர்க்க நரகமும் அனந்தம்நற்
றெய்வமும் அனந்தம் பேதந்
திகழ்கின்ற சமயமும் அனந்தமத னால்ஞான
சிற்சக்தி யாலுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனஅன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே,
கருதரிய ஆனந்த மழைபொழியும் முகிலைநம்
கடவுளைத் துரியவடிவைப்
பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பைப்
பேசரும் அனந்தபத ஞானஆ னந்தமாம்
பெரியபொரு ளைப்பணிகுவாம்.

## மூன்றாவது பாடல்

தத் த்வம் அஸி என்பது மஹாவாக்கியம். இதில் தத் என்னும் சொல் அது எனப் பொருள்படுகிறது. இது பரம்பொருளைக் குறிக்கிறது. முதல் பாடலில் பரம் பொருள் விளக்கப்பெற்றது. த்வம் என்னும் சொல் நீ எனப் பொருள்படுகிறது. இது ஜீவாத்மனைக் குறிக்கிறது. இரண்டாவது பாடல் ஜீவாத்மனுக்கு விளக்கமாகிறது. அஸி என்னும் சொல் இருக்கிறாய் எனப் பொருள் படுகிறது. ஜீவனாகிய நீ பரமாத்மாவுக்கு உரியவனாகவோ, பரமாத்மாவின் ஓர் அம்சமாகவோ, அல்லது அதன் சொரூபமாகவோ இருக்கிறாய் என்பது பொருள். ஜீவாத்மன் பரமாத்மாவோடு தன் தொடர்பை நிலை நாட்ட என்னென்ன சாதனங்களைச் செய்யவேண்டும் என்பது இப்பாடலில் அடங்கியிருக்கிறது. சாதனங்கள் எல்லாம் இதில் பெரிதும் தொகுக்கப்படுகின்றன. இத்தனை சாதனங்களையும் ஒரே சாதகன் செய்ய வேண்டும் என்பது அவசியமல்ல. ஏதேனும் ஒன்றை அல்லது சிலவற்றை அவன் உறுதியாகக் கையாண்டால் போதுமானது. ஆயினும் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் இடையே உள்ள இணக்கத்தை நிலைநாட்டுதற்கு இத்தனை வித சாதனங்கள் இருக்கின்றன என்பதை அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது.

அத்வைத வஸ்துவை என்று பாடல் ஆரம்பிக்கிறது. துவைதம் என்றால் இரண்டு. இரண்டு அல்ல என்பதை அத்வைதம் என்னும் சொல் சுட்டிக்காட்டுகிறது. கடவுள் வேறு; உலகம் வேறு என்பது பொதுவாக மக்கள் எண்ணிவரும் எண்ணம். உண்மையில் கடவுளும் உல

கமும் இரண்டல்ல; அத்வைதம். ஆவியாக எங்கும் வியாபகமாக நீர் இருக்கிறது. மலையுச்சியில் அது உறை பனியாக இருக்கிறது. உறைபனியைக் கண்ணால் காண லாம். அதற்கு வடிவம் இருக்கிறது. தொட்டு எடுத்துக் கையாளலாம். ஆனால் ஆவியோ கட்புலனாகாதது. அதைக் காரியப்படுத்தவும் முடியாது. எனினும் ஆவி என்பது ஒரு வஸ்து, உறைபனி என்பது மற்றொரு வஸ்து என்று சொல்லலாகாது. இரண்டும் ஒரே வஸ்து. கடவுளை விளக்க வந்த பக்தர் ஒருவர் 'உலகனைத்தும் ஆனாய் நீ' என்று பகர்ந்தார். வஸ்து என்று எடுத்துக் கொள்ளு மிடத்து கடவுள் வேறு உலகம் வேறு அல்ல. ஆனால் உலகம் நமக்குக் கட்புலனாவது போன்று கடவுள் கட் புலனாவதில்லை. அவரை நாம் அனுபூதியில் உணர வேண்டும். அவரே இவ்வுலகனைத்தும் ஆயிருக்கிறார் என்பதையும் அனுபூதியில் அறிந்தாகவேண்டும். அதற் காகச் சாதகன் சாதனங்கள் செய்கின்றான்.

மங்கிய வெளிச்சத்தில் வழியில் பாம்பு ஒன்று தென்பட்டது. அதனருகில் வந்துவிட்ட வழிப்போக்கன் ஒருவன் துள்ளிக்குதித்து எட்ட நின்றான். நெஞ்சம் படபடவென்று அடித்தது. பாம்பைத் தாண்டி எப்படிச் செல்வது என்று திகைத்தான். பாம்பும் வழியை விட்டு நகரவில்லை. இதற்குள்ளாக மற்றொரு மனிதன் கைவிளக்குடன் அங்கே வந்தான். விளக்கு வெளிச்சத்தில் பார்த்தபொழுது பாம்பு அல்ல கயிறு என்பது புலனா யிற்று. இந்த அனுபவத்தில் கயிறும் பாம்பும் அத்வைத வஸ்து. இரண்டு வஸ்துக்கள் அல்ல. அக்ஞான நிலை யில் பாம்பாகத் தென்பட்டது. பாம்பாகத் தென்பட்டுக் கொண்டிருந்த பொழுதும் உண்மையில் அது கயிறே.

ஞானம் வந்தபொழுது அதன் யதார்த்த நிலை அறியப் பட்டது. நமக்கு ஞானம் வரும்பொழுது உலகமாகத் தென்படுகின்ற பொருள் பிரம்மமே என்பது தெளிவாகும்.

ஜீவர்களாகிய நாம் இயற்கையிலேயே அத்வைதிகள். மாறுபட்டும் இரண்டு கருத்துக்களில் நாம் ஏககாலத்தில் ஊறியிருப்பதில்லை. சந்தோஷத்தில் இருக்கும்பொழுது நமக்குத் துக்கம் இல்லை. துக்கத்தில் இருக்கும்பொழுது சந்தோஷம் இல்லை. அயர்ந்து உறங்கும்பொழுது நமக்கு சொப்பனமோ, ஜாக்கிரதாவஸ்தையோ இல்லை. சொப் பனம் வரும்பொழுது ஸுஷுப்தியையும், ஜாக்கிரதா வஸ்தையையும் அடித்து விடுகிறது. பின்பு, ஜாக்கிரதத் துக்கு வரும்பொழுது அது சொப்பனத்தையும், ஸுஷுப்தியையும் நீக்கிவிடுகிறது. இந்த மூன்று அவஸ் தைகளையும் நாம் நாள்தோறும் அனுபவிக்கிறோம். ஆனால் மூன்றையும் சேர்த்து அனுபவிக்க முடியாது. ஒரு வேளையில் ஏதோ ஒன்றைத்தான் அனுபவிக்கிறோம். அனுபவிக்கும் ஒன்று மற்ற இரண்டையும் அகற்றி விடுகிறது. அந்த அளவில் நாம் அத்வைதிகளே. இவ் இயல்பை ஆத்மசாதனத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள லாம். நாம் ஆழ்ந்து ஆத்ம சொரூபத்தில் லயித்திருக்கும் பொழுது சரீரபோதம் நமக்கில்லை. உடலைப் பற்றிய உணர்வு உறுதிபெற்றிருக்கும் பொழுது ஆத்ம உணர்வு நமக்கில்லை. எவ்வளவுக்கெவ்வளவு பிரகிருதி சம்பந்த மான உணர்வை ஒதுக்கி வைத்துவிட்டு ஆத்ம உணர் விலேயே ஆழ்ந்திருக்கின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு பரம்பொருளுக்கு நாம் அன்னியமானவர்கள் அல்ல என்னும் உண்மையை நிலைநாட்டுகிறோம். பரபோதம் ஓங்குமளவு ஜீவபோதம் மறைகிறது.

இந்த அத்வைத அனுஷ்டானம் லௌகீக வாழ்க்கைக்கும் பெரிதும் பயன்படும். உலகிலுள்ள உயிர்களோடு இணக்கம் கொள்ள நாம் கடமைப்பட்டிருக்கின்றோம். இந்த இணக்கத்தை மேலான இணக்கமாகச் செய்யுமளவு நாம் மேன்மையுறுகிறோம். இணக்கத்தைக் கீழ்மைப்படுத்துமளவு நாம் கீழ்மக்கள் ஆகின்றோம். விதவிதமான பாங்குடைய மக்களுடனும் மற்ற உயிர்களுடன் நாம் ஒட்டி உறவாடுகின்றோம். அல்லது ஏதேனும் ஒருவிதத் தொடர்பு வைக்கின்றோம். அப்படித் தொடர்பு வைக்கப் போகுங்கால் ஒரு பேருண்மையை நமக்கு நாமே ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். எந்த உயிருடன் பழகுகிறோமோ அந்த உயிரும் நாமும் சொரூபத்தில் வெவ்வேறு ஆனவர்கள் அல்ல. ஒரு பொருளின் பல தோற்றங்களாக நாமும், நமக்கு முன்னிருக்கும் உயிர்களும் வந்துள்ளன என்பதை ஞாபகப்படுத்திக் கொண்டால் நாம் வைக்கின்ற இணக்கம் முறையான இணக்கம் ஆகும். அப்பொழுது அறநெறியை நாம் நன்கு கடைப்பிடித்தவர் ஆவோம். நாம் நோய்வாய்ப்பட்டிருக்கும்பொழுது நமக்கு நாமே பத்தியம் வைத்துக் கொள்கிறோம். நம் விரலில் வளர்ந்திருக்கும் நகத்தைக் களைகிறோம். அப்படிச் செய்வது துவேஷ புத்தியால் அல்ல; சீரிய மனப்பான்மையுடன் அச்செயலைச் செய்கிறோம். நமக்குக் கெடுதல் செய்யும் மற்ற உயிர்களோடு அத்வைத இணக்கம் கொண்டால்; நாம் அவ்வுயிர்களின் மீது எடுத்துக் கொள்ளும் நடவடிக்கையும் அறநெறிக்கு உட்பட்டதாகவே இருக்கும். அறநெறிக்குட்பட்ட செயல் செய்கின்றவனை அச்செயல் மேன்மைப்படுத்துகிறது. யார் மீது அச்செயல் புரியப்பட்டதோ

அம்மனிதனும் மேன்மையடைகின்றான். ஆக, அத்வைத சாதனம் இவ்வுலக வாழ்க்கைக்கும் உதவுகிறது, பரத்தை அடைதற்கும் உதவுகிறது.

சொற்பிரகாசத்தனியை என்பது அடுத்த கருத்து. தனி என்று சொல்லுவதால் இரண்டு வஸ்துக்கள் இல்லை என்பது வெளியாகிறது. இருக்கிற ஒரே வஸ்து பிரபஞ்சப் பொருளாகவும் இருக்கிறது; பரம்பொருளாகவும் இருக்கிறது. பிரபஞ்சப் பொருள்களிடத்து வெவ்வேறு பாங்குகளைக் காண்கிறோம். பாங்குகளுக்கு ஏற்ப வெவ் வேறு பொருள்கள் என்று அவைகள் அழைக்கப்படு கின்றன. பூமியும் சூரியனும் ஒரே வஸ்து. ஆனால் சூரியன் பிரகாசம் வாய்ந்தது. பூமி ஆறிப்போய் பிரகாசத்தை இழந்தது. இயற்கையில் பிரகாசமுடைய பொருள் களையும் பிரகாசமற்ற பொருள்களையும் காணலாம். நவரத்தினம் என்பவை இயற்கையிலுள்ள கற்களே. ஆனால் அவைகளுக்குப் பிரகாசம் உண்டு. மற்ற கற் களுக்குப் பிரகாசம் இல்லை. இனி, சொல்லை ஆராய்ந்து பார்ப்போம். சொல் என்பது ஓசையிலிருந்து வருகிறது. ஓசை ஒலி யாவும் பரம்பொருளிடத்திருந்து வந்தவைகள். ஓசை சொல்லாக வடிவெடுக்கிறது. சம்ஸ்கிருதத்தில் சொல்லை பதம் என்கின்றோம். ஒவ்வொரு பதத்துக்கும் அர்த்தம் உண்டு. பதத்தையும் அதன் அர்த்தத்தையும் சேர்த்து பதார்த்தம் என்கின்றோம். இதில் மேலாம் தத்துவம் ஒன்றிருக்கிறது. நாம் கையாளும் பொருள் களைப் பதார்த்தம் என்கிறோம். ஒவ்வொரு பொருளும் சப்த சொரூபமாகவும், சப்தத்தின் அர்த்தமாகவும் அமைந்திருக்கிறது என்பது கோட்பாடு. ஆதலால் சப்தத் துக்கு மதிப்பு மிக உண்டு. பிரபஞ்சப் பொருள்களில்

பிரகாசம் வாய்ந்த பொருள்களும், பிரகாசம் குறைந்த பொருள்களும் இருப்பது போன்று சப்தத்தில் அல்லது சொல்லில் பிரகாசம் நிறைந்த சொல் உண்டு; பிரகாசமற்ற சொல்லும் உண்டு. பிரகாசம் நிறைந்த சொல்லை உச்சரிப்பதால் அதை உச்சரிக்கின்ற ஜீவனிடத்துப் பிரகாசம் வளர்கிறது. தீயினுள் இட்ட இரும்பு தானே தீமயம் ஆகி ஒளிர்கிறது. பிரகாசம் நிறைந்த சொல்லை உச்சரித்துக் கொண்டிருக்கிற ஜீவன் பிரகாசமயம் ஆகின்றான். பிரகாசம் நிறைந்த சொல்லுக்கு மந்திரம் என்று பெயர். மனத்தை உறுதிப்படுத்தும் வல்லமை அதற்குண்டு. அத்தகைய வல்லமை அதற்கு உண்டு என்பதை நாம் அறிந்து கொள்ளாவிட்டாலும் அதன் சக்தி குறைந்து பட்டுப் போவதில்லை. பின்பு சக்தி நிறைந்த இந்த மந்திரங்கள் நம் கைவசம் இருப்பது நமக்கு அருள் துறையில் பெரிய பேறு ஆகின்றது. இவைகளுள் ஏதேனும் ஒன்றைச் சாதகன் ஒருவன் தொடர்ந்து உச்சரித்து வருவானாகில் அவன் ஆத்மசாதனத்தில் முன்னேறுகின்றான். அவனுடைய மனதே அதன் மூலம் தெளிவடைந்து விடுகின்றது. தெளிவடைந்த மனத்தை ஞானக்கண் எனலாம். பரம் பொருளின் சொரூபத்தை அறிந்து கொள்ளும் வல்லமை தெளிந்த மனதுக்கு வந்துவிடுகிறது. கடவுளும் கடவுளுடைய நாமமும் ஒன்றே என்பது கோட்பாடு. கடவுளை அறிந்து கொள்ளாதவனும் அவனுடைய நாமத்தைக் கேட்டிருக்கின்றான். அதை உச்சரிப்பதால் அவன் கடவுளை அணுகி அவரை அடைகின்றான். கடவுள் ஒருவர்; அவருக்குப் பெயர்கள் பல. எப்பெயரிட்டு அழைத்தாலும் மெய்ப்பொருள் ஒன்றே அடையப்படுகிறது. சிவன், நாராயணன், ராமன், கிருஷ்ணன், சக்தி ஆகிய

சொற்களெல்லாம் மந்திரங்களாக வடிவெடுக்கின்றன. இத்தனை சொற்களில் ஏதேனும் ஒரு சொல்லை உறுதியாகப் பிடித்துக்கொண்டால் மெய்ப்பொருள் அடையப்படுகிறது. மெய்ப்பொருளின் ஸ்தூல சொரூபம் மந்த்ரம். பிரகாசம் வாய்ந்த சொல் என்று அது விளக்கப்பெறுகிறது. பிரகாசம் நிறைந்த இத்தனை சொற்களும் தனிப்பொருள் ஒன்றினிடத்து ஜீவனைக் கொண்டு சேர்க்கின்றன. ஆதலால் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பை நிலை நாட்டுதற்குப் பிரகாசம் நிறைந்த சொல் உதவுகிறது. நாம ஜபத்தால் கடவுள் அடையப்படுகிறார் என்பது கோட்பாடு.

அருமறைகள் முரசு அறைவது அடுத்த சாதனம் ஆகிறது. வேதங்களுக்கு மறைகள் என்பது மற்றொரு பெயர். நூல்களை ஓதி உணராதவர்களுக்கு அவை மறைபொருளாகக் கிடக்கின்றன. ஓதி உணருமளவு அவைகளின் உட்பொருள் வெளியாகிறது. கடவுளை சாக்ஷாத்கரித்தவர்கள் இயற்றியுள்ள நூல்கள் எல்லாம் சாஸ்திரங்கள் ஆகின்றன. ஆப்த மொழி என்றும், சுருதி என்றும், நிறைமொழி என்றும் அவைகளையே பகரலாம். வேதம் அல்லது மறை என்பது அவைகளுக்குப் பொதுப் பெயர் ஆகும்.

கடவுள் தத்துவத்தை விளக்கும் சாஸ்திரங்களைப் பக்தி விசுவாசத்துடன் ஆராய்ச்சி பண்ணுவது ஒருவித ஆத்ம சாதனமாகும். வெறும் பாண்டித்தியத்துக்காக வென்று அவைகளை ஆராய்பவர்களும் உண்டு. அத்தகைய வாசா ஞானம் பிறரை மயக்குதற்குப் பயன்படும்; ஆத்ம சாதனத்துக்கு உதவாது. ஒரு விதத்தில் வாசா ஞானம் ஆத்ம சாதனத்துக்கு இடைஞ்சலாகவே அமைந்து

விடுகிறது. கல்விச் செருக்கை அது உண்டுபண்ணி விடுமானால் சாதனத்துக்கு அது தடையாகிறது. பக்தியைப் பெருக்கிப் பணிவை உண்டுபண்ணுமானால் நூல் ஆராய்ச்சியும் ஒரு சாதனமாகிறது. கடவுளின் மகிமைகளைப் பற்றி நாம் நன்கு சிந்திப்பதற்கு சாஸ்திர ஆராய்ச்சி உதவுகிறது. எண்ணிறந்த பாங்குகளில் சாஸ்திரங்கள் கடவுளின் மகிமையை விளக்கிக் கொண்டே போகின்றன. விதவிதமாக விளக்கியான பிறகும் அவரை முற்றிலும் விளக்க யாருக்குத்தான் முடியும் என்று சாஸ்திரங்கள் சாற்றுகின்றன. உணவு வகைகளில் விதவிதமானவைகள் அமைந்திருந்தால் உண்பவர்கள் அவரவர் நாவுக்கு ஒத்ததை ஏற்றுக்கொள்ளலாம். இறைவனைப்பற்றி மறைகள் ஏராளமாக முரசு அறைவதால் பலதரப்பட்ட சாதகர்கள் அவரவர் மனதுக்குப் பிடித்த தெய்வ மகிமையில் மனதை ஆழ்ந்து செலுத்தலாம். அது நல்ல ஆத்ம சாதனம் ஆகிறது. ஆக, இறைவனுக்கும் உயிர்களுக்குமிடையில் உள்ள இணக்கத்தை உறுதிப்படுத்துதற்கு முறையான சாஸ்திர ஆராய்ச்சியும் ஒரு சாதனமே.

அறிவினுக்கறிவாதல் அடுத்த கோட்பாடு. கடவுளுடைய வெவ்வேறு மகிமைகளை சாஸ்திரங்கள் சொல்லியான பிறகு அக்கடவுளையே இத்தகையவன் என்று அவைகள் சுட்டிக்காட்டுகின்றன. ஜீவர்களாகிய நாம் நமக்குச் சொந்தமாயிருக்கும் அறிவை உணர்கின்றோம். தான் அறிவுப் பொருள் என்பதை அறிந்து கொள்ளாத ஆத்ம சாதகன் இல்லை. செய்யத்தகுந்தது எது, தகாதது எது என்பதை நம் அறிவைக் கொண்டு நிர்ணயிக்கிறோம். ஏற்புடைய கோட்பாடு எது, விலக்குதற்குரிய கொள்கை எது என்பனவற்றையும் நம் அறிவைக்கொண்டே அளக்

கின்றோம். ஆக, நாம் படைத்துள்ள அறிவு நமக்குத் தெற்றென விளங்குகின்றது. இந்த அறிவைப் பிடித்துக் கொண்டு மேல் நோக்கிச் செல்லுதலும் நல்ல ஆத்ம சாதனமாகிறது. நீண்ட சங்கிலி இருக்கிறது. அதில் ஒரு வளையைப் பிடித்துக் கொண்டால் அதினின்று அடுத்த வளைக்குப் போகலாம். தொடர்ந்து சங்கிலி முழுதுக்கும் தொடர்வை உண்டுபண்ணிக்கொள்ளலாம். நம் அறிவு அத்தகையது. ஆழ்ந்த கடலில் அடுக்கடுக்காக நீர் நிற்கின்றது. மேல்பரப்பில் அலை வீசிக் கொண்டிருப்பதும் அதே நீர். அடிப்பாகத்தில் அசைவற்றிருப்பதும் அதே நீர். அசைகின்ற அலை போன்றது நம் அறிவு. அதற்கு அடுத்த படியில் இருக்கும் அசையாத அறிவு சொரூபத்தினுள் நாம் மூழ்கலாம். அதற்குச் சற்று கீழே இருக்கின்ற அதைவிட ஆழ்ந்த அறிவினுள் பிறகு பிரவேசிக்கலாம். இங்ஙனம் அறிவுக் கடலினுள்ளே நாம் ஆழ்ந்து மூழ்கிப் பழகினால் நமது சிற்றறிவுக்கு ஆதாரமாயிருக்கும் ஒரு பேரறிவின்கண் நாம் போய்ச்சேருவோம். அதனுடைய கிரணமாக வந்தது தான் நமது சிற்றறிவு. தீயினின்று பொறி பறப்பது போன்று நம் மனத்தகத்திருக்கும் பேரறிவினுடைய ஒரு சிறு கிரணம் உலக அறிவாக உரு எடுத்து வருகிறது. கிரணமும் மூல ஒளிப் பிழம்பும் ஒன்றே. அவைகள் வெவ்வேறு வஸ்துக்கள் ஆகா. நமது சிற்றறிவு பேரறிவினிடத்திருந்து உரு எடுத்து வந்துள்ளது என்பதை அறிந்து கொண்டால் நமக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்வை நாம் அறிந்து கொண்டவர் ஆகின்றோம். ஆக, நம் அறிவைத் தெளிவுபடுத்துவதும் ஒரு நல்ல ஆத்ம சாதனம் ஆகிறது.

எல்லா உயிர்களும் அறிவு சொரூபம் என்றாலும் அவைகளில் பல தங்கள் அறிவு சொரூபம் என்பதை

அறிந்து கொள்வதில்லை. தங்கள் சொரூபத்தின் மற்றொரு பகுதியை உயிர்களனைத்தும் எளிதில் அறிந்து கொள்கின்றன. அவைகள் அறிந்து கொள்ளும் இயல்பை ஆனந்தமயமான ஆதி என்கின்றார் தாயுமானவர். ஆனந்தத்தை அறியாத உயிர் பிரபஞ்சத்தில் இல்லை. ஆனந்தத்தைக் கண்டு மகிழ்வுறாத உயிரும் உலகில் இல்லை. பேருயிர் என்பதும் சிற்றுயிர் என்பதும் ஆனந்த சொரூபத்தில் இல்லை. ஆனந்தம் பிரம்மம் என்பது மறைமொழி. இந்த ஆனந்தமே இத்தனை உயிர்களாக உரு எடுத்திருக்கிறது. தன் ஆனந்தத்தை விளக்குதற்கு இத்தனை விதமான வடிவங்களும் பயன்படுகின்றன. மரம் செடி கொடிகளாகிய நிலைத்திணையில் ஆனந்தம் தன்னை விளக்குகிறது. வளர்வதில் அவைகள் அடையும் ஆனந்தத்தைக் காணாதவர்களுக்குக் கண் இல்லை என்றே இயம்பிவிடலாம். ஊர்வன, நடப்பன, நீந்துவன, பறப்பன ஆகிய யாவும் ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றன. ஆனந்தத்தை நாடியே மக்கள் எல்லாச் செயல்களையும் செய்கின்றனர். என்னென்ன வகைகளில் ஆனந்தத்தைப் பெறமுடியும் என்பது மக்கள் இனத்துக்கு ஏற்பட்ட பிரச்னையாகும். இந்த ஆனந்தத்தை அனுகுபவர்களும் அதை நிலைபெறச் செய்கின்றவர்களும் தெய்வ சான்னித்தியத்துக்கு அருகில் வருகின்றனர். தெய்வத்தை அடைந்தவர்கள் பிறகு அதில் நிலைபெற்றுவிடுகின்றனர். இங்குக் கேள்வி ஒன்று எழலாம். ஆனந்தத்தைத்தான் உயிர்களனைத்தும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றனவே, அந்த ஆனந்தமே தெய்வமென்றால் இனிப் புதியதாக ஆனந்தமயமான தெய்வத்தை அடைவதற்கு முயலுவது எதற்காக என்பது அக்கேள்வி. அந்த ஆனந்தம் இடையிடையே

தடைப்படுவதாக உயிர்கள் உணருகின்றன. தடைப்படும் பொழுதெல்லாம் அந்த இழந்துவிட்டதாக எண்ணி அவைகள் துன்புறுகின்றன. ஆக, துன்பம் என்பது ஆனந்தத்தின் எதிர்மறைத் தோற்றமாம். உயிர்கள் அனுபவித்து வரும் ஆனந்தத்துக்கு அவைகளினுடைய அறியாமையினால் ஆதி, அந்தம் இருக்கிறது. உண்மையில் ஆனந்த சொரூபமாகிய தெய்வத்துக்கு ஆதியுமில்லை, அந்தமுமில்லை. ஆகையினால் அது விஷய ஆனந்தத்துக்கெல்லாம் முதல் காரணமாய் இருப்பதால் ஆதி என்று அழைக்கப்படுகிறது. தன்னளவில் அந்த ஆனந்தத்துக்கு துவக்கமே இல்லாதிருப்பதால் அது அனாதி என்றும் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு உயிரும் ஒவ்வொரு போக்கில் ஆனந்தத்தை அனுபவிக்கிறது. கேட்பதில் ஓர் உயிருக்கு ஆனந்தம். காண்பதில் மற்றொர் உயிருக்கு ஆனந்தம். அருந்துதலில் இன்னுமொரு ஜீவனுக்கு ஆனந்தம். பிரபஞ்சத்தினோடு கலந்துள்ள ஆனந்தம் பலதரப்பட்ட ஆனந்தமாகக் காட்சி கொடுக்கிறது. சர்க்கரையானது பல பண்டங்களில் கலக்கும்போது பலதரப்பட்ட தித்திப்பாக அது தென்படுகிறது. உண்மையில் ஒரே தித்திப்பு பலதரப்பட்டதாகத் தோன்றுகிறது. பரம்பொருளிடத்துள்ள ஒரே ஆனந்தம் பிரபஞ்ச சொரூபமாக வடிவெடுக்கும் பொழுது பலதரப்பட்ட ஆனந்தமாகத் திகழ்கிறது. ஒன்றுதான் இத்தனையாகத் தோன்றுகிறது என்பதை அனுபூதி வாயிலாக நாம் அறிந்தாக வேண்டும். இதை நமக்கு ஞாபகமூட்டுதற்கு அது ஏக தத்வ சொரூபம் என்று இயம்பப் பெறுகிறது. இயற்கையில் கலந்திருக்கும் பொழுது அது பலதரப்பட்டது. தன்னளவில் அது ஏக தத்வ சொரூபம். ஆனந்

தம் என்றைக்கும் நிலைத்துள்ளது. மறைவது போன்றும் தோன்றுவது போன்றும் தென்பட்டாலும் உண்மையில் அது மாறாதது. ஆனந்தமே பிரம்மம். ஆனந்தத்தை இழந்து விட்டது போன்று தென்படும் ஜீவன் ஆனந்தத்தில் நிலைபெறுமளவு அவன் ஆத்ம சாதனத்தில் மேல் நோக்கிப் போகின்றான்.

அறிவாய் ஆனந்தமாய் இருப்பது தெய்வம். எண்ணிப் பார்க்குங்கால் நாம் அதற்குப் புறம்பானவர்கள் அல்ல. அறிவும் ஆனந்தமும் நமக்குப் புறம்பானவைகள் அல்ல. மதங்களெல்லாம் செய்யும் செயல் யாது என்பது கேள்வி. ஒவ்வொரு மதமும் மெய்ப்பொருளைப் புகட்டுவதாகக கூறுகிறது. ஒரு மதம் மற்றொரு மதத்தைக் கண்டிக்கவும் செய்கிறது. தனக்கு நிகரானது வேறு எந்த மதமும் இல்லை என்று தன்னையே பெருமை பாராட்டும் இயல்பு ஒவ்வொரு மதத்துக்கும் இருக்கிறது. இப்படிப் பகர்கின்ற மதங்களுள் இம்மெய்ப்பொருள் கட்டுப்பட்டதல்ல என்பதை இந்த மதங்களே அறியமாட்டா. சர்க்கரை தித்திக்கிறது என்று ஒருவன் கூறுகின்றான். இல்லை, அது மதுரமாக இருக்கிறதென்று மற்றொருவன் மொழிகின் றான். அது இனிக்கும் தன்மை உடையதென்று இன்னொ ருவன் இயம்புகிறான். இவர்களுக்குள் விவாதம் பெரு மிதமாய் வந்துவிடுகிறது. இந்த விவாதத்தின் மூலம் சர்க் கரையின் சுவையைப் பெற்றுவிட முடியுமா? இவர்கள் எழுதிவைத்த எழுத்துக்களை நீரில் கரைத்துக் குடித்தால் சர்க்கரையின் சுவை வந்துவிடுமா? இல்லை. சர்க்கரையின் சுவை விவாதத்திலோ எழுத்திலோ அடங்கியது அன்று. அங்ஙனம் அறிவாய் ஆனந்தமாய் இருக்கும் பொருள் எந்த சமயத்திலும் கட்டுப்பட்டதன்று. அதனால் அதை மத

சம்மதம் பெறாதது என்கிறார் தாயுமானவர்.

அறிவாய் ஆனந்தமாய் இருக்கும் பொருள் எதைச் சார்ந்திருக்கிறது என்னும் கேள்வி அடுத்தபடி எழலாம். பிரபஞ்சத்தில் தோய்ந்திருப்பவர்களுக்கு பிரபஞ்சப் பொருள்களைக் குறித்து ஆனந்தம் வருகிறது. பிரபஞ்சப் பொருளைப் பற்றிய அறிவும் உண்டாகிறது. இயற்கை சம்பந்தமான அறிவும் ஆனந்தமும் இயற்கையைப் பற்றுக்கோடாகக் கொண்டிருக்கின்றன. இயற்கையை மறந்திருக்கும் வேளையில் அல்லது இயற்கையைப் புறக்கணிக்கும் வேளையில் அறிவுக்கோ, ஆனந்தத்துக்கோ ஒருவிதமான இடையூறும் இல்லை. பிரபஞ்சத்தை மறந்து தூங்கும் பொழுதும், பிரபஞ்சத்தை ஒதுக்கி வைத்து விட்டுத் தியானம் பண்ணும் பொழுதும் ஒருவன் அறிவு சொரூபமாய் ஆனந்த சொரூபமாய் இருக்கின்றான். ஆதலால் அந்த சிதானந்தத்துக்குப் பற்றுக்கோடு ஒன்றும் வேண்டியதில்லை. சாலம்ப ரகிதமானது என்னும் சொற்களால் இக்கருத்து விளக்கப்படுகிறது. சாலம்பம் என்பதன் பொருள் பற்றுக்கோடு. ரகிதமானது என்பதன் பொருள் அற்றது. சிதானந்தம் தன்னையன்றி வேறு எதையும் சார்ந்திருப்பதன்று.

உலக இன்பத்துக்கு துவக்கமும் முடிவும் உண்டு. விஷயங்களினின்று வரும் ஆனந்தமும் அத்தகையதே. ஆனால் ஆனந்த சொரூபமாகிய ஆத்மாவோ சாசுவதம் ஆனது. என்றென்றும் இருக்கிறது. அது புஷ்கலம், நிறைந்திருப்பது. இயற்கையோடு சம்பந்தப்பட்ட அறிவும் இன்பமும் ஓங்கவும் ஒடுங்கவும் செய்கின்றன. அல்லது ஓங்குபவை போன்றும், ஒடுங்குபவை போன்றும் காட்சி கொடுக்கின்றன. அசைகின்ற தண்ணீரில் தென்

படும் சந்திர பிம்பம் அசைகிறது. உண்மையில், சந்திரன் தண்ணீரில் தென்பட்ட சந்திரன் போன்று அசைவ தில்லை. அங்ஙனம் சிதானந்தமாய் இருக்கும் மெய்ப் பொருள் என்றைக்கும் நிறை பொருளாகவே இருக்கிறது. குடத்தினுள் நிறைந்துள்ள நீர் ததும்புவதில்லை. நிறை பொருள் அப்படி அசைவற்றிருக்கிறது.

உடலில் உயிர் இருப்பதாக நாம் உணருகிறோம். உடல் அழிந்தவிடத்து உயிருக்கு ஆதாரம் ஒன்று மில்லாது போய்விடுகிறது. உடல் அழிந்து போகின்ற பொழுது ஆதாரமே போய்விடுவதால் பிறகு ஆத்மா வுக்கும் நிலைபேறு ஒன்றுமில்லை என்று கருதுபவர்கள் உண்டு. உண்மையில் ஆத்மா அத்தகையதன்று. ஆகாசத் துக்கு எப்படி ஆதாரம் ஒன்றும் தேவையில்லையோ அப்படி சிதாகாசமாகிய பரம்பொருளுக்கு ஆதாரம் ஒன்றும் தேவையில்லை. அக்கோட்பாட்டை நிராலம்பம் என்னும் சொல்லில் விளக்குகிறார். இனி ஆகாசத் திலுள்ள மற்றொரு பேரியல்பு சிதாகாசத்திலும் இருக் கிறது. பூமி, சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள் ஆகியவை களுக்கு இருப்பிடம் ஆகாசம் அல்லது வெட்டவெளி. அதேபாங்கில் பிரபஞ்சம் முழுதுக்கும் இருப்பிடம் பரம்பொருள். அக்கருத்தை முன்னிட்டு பரம்பொரு ளாகிய சிதாகாசம் ஆலம்பம் எனப்படுகிறது. சாதகன் ஒருவன் இந்த இயல்பிலே ஊறியிருக்கின்றபொழுது அவன் தன்னுடைய நிஜ சொரூபத்தில் இருக்கிறான். சரீரம் தேய்ந்து அழிதற்கிடையில் ஆத்மாவாகிய தான் சாசுவதமாக இருப்பதாக அவன் உணருதல் வேண்டும். நிறைநிலையிலுள்ள தனக்கு ஒரு குறைவும் இல்லை என் கின்ற எண்ணத்தில் அவன் ஊறியிருத்தல் வேண்டும்.

பிரபஞ்சத்தில் எதையும் தான் சார்ந்திருக்கிறதில்லை என்கிறதையும் அவன் அறியக் கடமைப்பட்டிருக்கின்றான். அறிவு சொரூபியாகிய தான் எண்ணத்தின் மூலம் இயற்கைப் பொருள்களுக்குத் தன் உள்ளத்தில் இடம் கொடுத்தால் அவைகள் இருக்கின்றன, இடம் கொடாவிட்டால் ஆலம்பமின்றி அவைகள் மறைந்துபோய் விடுகின்றன. சுருங்கச் சொல்லின் சாதகன் ஒருவன் தன்னில் தானாய் இருக்கின்றான். இயற்கைக்கு எண்ணத்தின் மூலம் இடம் கொடுப்பதற்குமேல் அது அவன் உள்ளத்தில் வந்து குடியிருப்பதில்லை. இத்தகைய பண்பைச் சாதகன் பெற்றுவிடும் பொழுது அவன் நிறை பொருளுக்கு அருகில் வந்துவிட்டான் என்பதாகிறது.

எங்கும் வியாபித்துள்ள வெட்டவெளி அமைதியே வடிவெடுத்தது. காற்று முதலியன இரைச்சலிடும். பெரு வெளியில் இரைச்சலில்லை. பேரறிவு வெளியும் அத்தகையது. இக்கோட்பாடு சாந்தபதவியோம நிலை என்று இயம்பப்படுகிறது. இறைவனது சான்னித்தியத்துக்கு வர வர சாதகன் சாந்த சொரூபி ஆய்விடுகிறான். தங்கு தடையின்றி தனது 'சிதானந்த சொரூபத்தை சாதகன் உணர்கின்றான். அது பிரபஞ்சத்தோடு சம்பந்தப்பட்டதல்ல. இக்கோட்பாடுகளெல்லாம் சேர்ந்து நித்த நிர்மல் சகித நிஷ்பிரபஞ்சப் பொருள் என இயம்பப்படுகிறது.

'பஞ்சேந்திரியங்களின் துணையின்றி இப்பெரிய பொருள் தன்னைத்தானே உணருகிறது. ஆதலின் அது நிர்விஷயம். கண்ணாடியில் பிம்பங்கள் தென்படுகின்றன. பிம்பங்கள் பட்டு கண்ணாடி தனது தெளிந்த நிலையை ஒருநாளும் இழந்து விடுவதில்லை. ஆத்ம சைதன்யத்தின் மீது அங்ஙனம் பிரபஞ்சம் பிரதிபலிக்கிறது. ஆயினும்

பிரபஞ்சத்தில் ஆத்ம சைதன்யம் ஒருநாளும் தோய்ந்து போய்விடுவதில்லை. ஆதலால் அது சுத்தமானது. தனக்கு அன்னியமான பொருள் ஒன்று ஆத்ம சைதன்யத்தில் வந்து கலக்கினால் அதன் தூயநிலை அப்பொழுது போய் விடுகிறது. பாலில் சுத்த ஜலத்தைக் கலக்கினால் பிறகு பால் சுத்தமானதாகாது. பாலுக்கு அன்னியமான பொருள் பாலுக்குள் வரக்கூடாது. ஆத்ம சைதன்யத்திடத்தோ வேறு எதும் வந்து கலந்துகொள்ள முடியாது. அதுவே ஆத்மாவின் யதார்த்த நிலை. இயற்கையினின்று எதையும் ஏலாத தூய நிலையில் ஆத்ம சாதகன் இருக்கிறான். பிம்பங்கள் படுவதால் கண்ணாடி விகாரப்படுவதில்லை. அங்ஙனம் பிரபஞ்சத் தோற்றத்தைச் சித்தத்தில் வாங்கிக் கொள்வதால் ஆத்மசொரூபம் விகாரமடைவதில்லை. அதை முன்னிட்டு அது நிர்விகாரம் எனப்படுகிறது.

ஒரே ஒரு வெளிதான் பொதுவாக அகிலாண்டத் துக்கும் இருப்பது போன்று ஒப்பற்ற ஒரே ஒரு சிதாகாசம் அல்லது சிதம்பரம் பிரபஞ்சம் முழுதுக்கும் பொதுவாய் இருக்கிறது. தடஸ்தமாய் என்னும் சொல்லில் இக்கருத்து விளக்கப்படுகிறது. பிரபஞ்சம் என்னும் சித்திரத்துக்கு சிதாகாசம் என்னும் திரை ஆதாரமாயும், பொதுவான தாயும் இருக்கிறது. அறிவுக்கு என்றும் பிரகாசமுண்டு. ஆதலால் நின்று ஒளிர் என அது இயம்பப்படுகிறது. இயற்கையை சிதாகாசம் தன்னிடத்திருந்தே தோற்று வித்து, திரும்பவும் தன்னில் கரந்து எடுத்துக் கொள்கிறது. அதை முன்னிட்டு இயற்கை என்னும் அழுக்கு அதில் ஒட்டிக்கொண்டிருக்கிறது எனக் கருதலாம். அப்படி யில்லை, அது நிரஞ்சனம், அழுக்குப் படியாதது.

நம் சரீரத்துக்கு அன்னியமான பொருள் சரீரத்தில்

சேர்ந்து விட்டால் நோய் வருகிறது. அந்த அந்நிய வஸ்துவை அகற்றியான பின்பே நோய் நீங்குகிறது. ஆத்ம சொரூபம் அப்படி நோய்வாய்ப்படுவது கிடையாது. அது நிராமயம். என்றைக்கும் நலமுற்றதாகவே அது இருக்கிறது. நிறைநிலையை விட்டு அது இறங்குவது கிடையாது.

இப்படி எங்கும் வியாபித்துள்ள பொருளை ஆத்ம சாதகன் எப்படிக் கருதவேண்டும் என்னும் கேள்வி எழலாம். நமது கண்ணை நாம் பார்ப்பதில்லை. ஆனால் கண்கொண்டு பிற பொருள்களைக் காண்கிறோம். அதேபாங்கில் சித்தம் அறியாதபடி சித்தத்தில் நின்று இலங்குகின்ற பொருளாய் ஆத்ம சொரூபம் இருக்கிறது. அதனுடைய பிரகாசத்தால் ஜடப்பொருள்கள் பிரகாசம் பெற்றவைகளாய்த் தென்படுகின்றன. இக்கோட்பாடு திவ்விய தேஜோமயம் என்னும் சொற்றொடரால் விளக்கப்படுகிறது. குடம் என்னும் எல்லைக்குள் ஆகாசம் அடைபட்டது போன்று தென்படுகிறது. உண்மையில் அது எந்த எல்லையிலும் அடைபட்டதல்ல. அங்ஙனம் சித்பர வெளிக்குள் வளர் தத் பரமதான பரதேவதை நிறைபொருளாய் ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. திரையின் மீது படக்காட்சி தென்படுவது போன்று இந்த அறிவானந்தமாகிய திரையின்மீது அண்டங்கள் தென்படுகின்றன. அண்டங்களிடத்து உள்ள உயிர்களில் தென்படும் அறிவும் ஆனந்தமும் உண்மையில் இந்த சிதாகாசத்தினின்று வரும் அறிவும் ஆனந்தமுமாம். சாதகன் இதை உணர்கின்றான். உணர்ந்து அஞ்சலி செய்வோம் என்று தன் வியக்தியை முற்றிலுமே இப் பரம்பொருளிடத்து கரைத்து விடுகின்றான். அதன் மூலம் அவன் பரம்பொருளை அடைந்தவனாகின்றான். பரம்பொருளுக்குத் தன்னை அன்னியமாகக் கருதியபொழுதும் அவன்

பரம்பொருளிலேயே இருந்தான். அதை அறிந்த பிறகும் அவன் பரம்பொருளிலேயே இருக்கிறான். இதை அறிவதால் வரும் லாபம் யாது? இதை அறிந்தவன் யான் எனது என்பதை விட்டு விடுகிறான். நிறைபொருளில் ஒன்றித்து விடுகிறான். வாழ்க்கைப் பிரச்னைகளெல்லாம் அவனுக்கு நீங்கிவிடுகின்றன. நிறைபொருளில் கலந்தது அவன் பெற்ற பயன். எல்லா ஜீவர்களும் விரைவில் அல்லது நாளடைவில் இந்நிலைக்கு வந்தே ஆகவேண்டும். இக்குறியை அறிபவர் விரைவில் வருகின்றனர். விரைவில் வருவதற்குத் துணைபுரிவது ஆத்மசாதனம். இக்கருத்துக்கள் அடங்கிய பாடல் வருமாறு:-

**அத்வைத வஸ்துவைச்; சொற்ப்ரகா சத்தனியை;**
**அருமறைகள் முரசறையவே**
**அறிவினுக் கறிவாகி, ஆனந்த மயமான**
**ஆதியை; அநாதியேக**
**தத்துவ சொருபத்தை; மதசம்ம தம்பெறாச்**
**சாலம்ப ரகிதமான**
**சாசுவத புஷ்கல நிராலம்ப ஆலம்ப**
**சாந்தபத வ்யோமநிலையை;**
**நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை;**
**நிர்விஷய சுத்தமான**
**நிர்விகா ரத்தைத்; தடஸ்தமாய் நின்றொளிர்**
**நிரஞ்சன நிராமயத்தைச்;**
**சித்தமறி யாதபடி சித்தத்தில் நின்றிலகு**
**திவ்யதே ஜோமயத்தைச்;**
**சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர**
**தேவதையை அஞ்சலிசெய்குவாம்.**

# ஸ்ரீ தாயுமானவர் இயற்றிய பாடல்கள்

உபநிஷதங்கள் கூறுகின்ற பரதத்துவங்கள் யாவற்றையும் தாயுமானவர் பாடல்களில் காணலாம். இவருடைய பாடல்கள் யாவும் மறைந்துபட்டுப் போகாது தமிழ் மக்கள் கைவசம் இருப்பது தமிழ் நாட்டின் தவச்செல்வமாகும். ஆத்ம சாதனத்தில் ஈடுபடுகிறவர்களுக்கு இவருடைய நூல்கள் ஒப்பற்ற அருள் விருந்தாக அமைந்துள்ளன. ஒவ்வொரு ஆத்ம சாதகரும் இவருடைய பாடல்களில் பொதிந்துள்ள கருத்துக்களை அறியும் வண்ணம் எளிய நடையில் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் விரிவான விளக்கம் தந்துள்ளார்கள். அவைகளாவன:-

| | | பக்கம் |
|---|---|---|
| பரசிவ வணக்கம் | கிரௌன் சைஸ் | 48 |
| பரிபூரணானந்தம் | ,, | 160 |
| சின்மயானந்த குரு | ,, | 166 |
| மௌனகுரு வணக்கம் | ,, | 154 |
| ஆனந்தமானபரம் | ,, | 148 |
| சுகவாரி | ,, | 148 |
| கருணாகரக் கடவுள் | ,, | 154 |
| எங்கும் நிறைகின்ற பொருள் | ,, | 108 |
| பராபரக்கண்ணி | | 184 |

விபரங்களுக்கு

காரியதரிசி,

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்,

திருப்பராய்த்துறை 639 115

திருச்சி மாவட்டம்.

# தர்ம சக்கரம்

ஸ்ரீராமகிருஷ்ண தபோவன
திங்கள் வெளியீடு

அறிவு வளர்ச்சிக்கு - ஆன்மீக முன்னேற்றத்திற்கு - இல்லற வாழ்விற்கு இணையற்ற பொக்கிஷம். பல அனுபவ ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஆன்றோர் அறிவுரைகள் அனைத்தும் தாங்கி 1952 ஜனவரி முதல் வெளி வந்து கொண்டிருக்கிறது. ஆன்மீக கருத்துக் களில் தெளிவுபெற தர்ம சக்கரம் சந்தாதாரராகச் சே[illegible] பயன் பெறுங்கள்.

